Registered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 34 — No. 4



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ சித்திரை 1961 ஏப்ரல் | இதழ் 4

உள்ளுறை — பக்கம்


திருவாசகத்தின் சிறப்பியல்புகள் சில ... 129

மெய்கண்டார் காலச் சூழ்நிலை ... 142

பஞ்சாங்க விளக்கம் ... 146

யாத்திரைக் கட்டுரை ... 154

செய்திச் சுருக்கங்கள் ... 159


பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா 4

மே மாதம்—திருவான்மியூரில்

# சமாஜச் சைவ சித்தாந்தக் கோடை வகுப்பு
# (Saiva Siddhanta Summer Class & Retreat)

சைவ சித்தாந்த மகா சமாஜம் முன் சில ஆண்டுகளில் நடத்தி வந்த சைவ சித்தாந்தக் கோடை வகுப்பை இவ்வாண்டு புதிய முறையில் நடத்த ஏற்பாடு செய்ய உத்தேசித்திருக்கிறது.

கோடை வகுப்பு 1961 மே மாதத்தில் சென்னைக்குத் தெற்கே 6 கல் தொலைவிலுள்ள தேவாரம் பெற்ற தலமாகிய திருவான்மியூரில் கடற்கரை அருகிலுள்ள அழகிய ஸ்ரீமத் பாம்பன் சுவாமிகள் குருபூசைச் சத்திரத்தில் நடைபெறும். இவ்விடத்தில் வாசகசாலை முதலிய வசதிகள் உள்ளன. சென்னைப் பிரபல கட்டிடக் கண்டிராக்டர் திரு. மாசிலாமணி முதலியார் முதலிய அன்பர்கள் தக்க உதவி புரிய முன் வந்துள்ளார்கள்.

**கோடை வகுப்பின் நோக்கம்:** சைவ சித்தாந்தத்தின் முக்கிய அம்சங்களை அறிந்து கொள்ளவோ அல்லது மறுமுறை படிக்கவோ தக்க முறையில் வாய்ப்பளிப்பதற்குத் தேர்ந்தெடுத்த ஆசிரியர்களைக் கொண்டு வகுப்பும் சொற்பொழிவுகளும் நடத்தப்படும். அது மட்டுமன்றிச் சைவ ஒழுக்கங்களையும் நடைமுறையில் மேற்கொள்ள வேண்டிய போதனைகளும் பயிற்சியும் அளிக்கப்படும்.

**வகுப்பின் திட்டம்:** ஏறக்குறையப் பின் வருமாறு அமைக்கப்படும்.

| | | |
|---|---|---|
| காலை | 5 மணி | காலைக்கடன், தேகப்பயிற்சி. |
| | 6 ,, | பூசை, கூட்டு வழிபாடு. |
| | 7 ,, | சிற்றுண்டி. |
| | 7-30—10-00 | சித்தாந்த வகுப்பு. |
| | 10-00—10-30 | ஆலய வழிபாடு. |
| | 10-30—11-30 | கிராமத்தில் உடல் தொண்டுப் பணிகள். |
| | 12-00— 1-30 | நடுப்பகல் உண்டி, இளைப்பாறுதல். |
| மாலை | 1-30— 3-00 | காலை வகுப்புச் சொற்பொழிவுகளின் கருத்தை எழுதி ஆசிரியருக்குக் காட்டுதல். |
| | 3-00— 4-30 | ஆசிரியரிடம் ஐயங்களைத் தீர்த்துக் கொள்ளுதல் (Seminar). |
| | 4-30 — 5-00 | தேநீர். |
| | 5-00 — 5-30 | ஆலய வழிபாடு, தியானம். |

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையஉள் நாடு

மலர் 34 | பிலவ சித்திரை 1961 ஏப்ரல் | இதழ் 4

## திருவாசகத்தின் சிறப்பியல்புகள் சில

(முருகவேள்)

முன்னுரை: அமிழ்தினும் இனிய நமது அருமைத் தமிழ் மொழியின்கண் உள்ள அரும்பெறல் நூல்கள் பலவற்றுள் ஒப்புயர்வற்ற தொன்றெனச் சிறந்து திகழ்வது திருவாசகம். "தண்டமிழின் மேலாந்தரம்" என வியந்து வியந்து புகழ்ந்து குறிப்பிடத் தகுந்த மாட்சிமை பெற்றொளிர்வது திருவாசகம். "ஓதி ஓதி யுணருந் தொறும் உணர்ச்சி யுதவும்" தெய்வநலஞ் சான்ற செந்தமிழ்த் திருநூல் திருவாசகம். வேறு பிற எந்தச் செந்தமிழ் நூலுக்கும் வாயாது திருவாசகத்திற்கு மட்டுமே வாய்த்துள்ள சிறப்பியல்புகள் பலப்பல.

உருக்கத் தன்மை: அவற்றுளெல்லாம் மிகவும் முதன்மையானதும் மேலானதுமாகக் கிளந்து குறிப்பிடற்பாலது கனிவும் கசிவும் மிக்க அதன் உருக்கத் தன்மையாகும். சிவபெருமான் "தப்பாமே தாள் அடைந்தார் நெஞ்சுருக்கும் தன்மையினன்" ஆதல் போல, நம் அருமைத் திருவாசகத் திருமறையும் தப்பாமே ஓதுவார் நெஞ்சுருக்கும் தன்மையது! தன்னை ஓதுவார் என்னராயினும், அவர்தம் கன்னெஞ்சமெலாம் கரைந்துருகச் செய்யும் பெற்றிமை மிக்கது திருவாசகம். கற்றார் கல்லார் என்னும் எல்லார் உள்ளங்களையும் நெகிழச் செய்து உருக்கம் விளைத்தற்கண், வேறு பிற எந்நூலும் திருவாசகத்திற்கு இணையாகாது என்பது அறிஞர் அனைவரும் ஒருமுகமாக உடன்பட்ட தொன்று.

"திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்" என்பது தமிழ் நாட்டுப் பழமொழி.

"வாக்கிற் கருணகிரி, வாதவூ ரர்கனிவில்,
தாக்கிற் திருஞான சம்பந்தர்,—நோக்கிற்கு
நக்கீர தேவர், நயத்துக்குச் சுந்தரனர்,
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்"

எனவரும் பாடலும் இவ் வுண்மையை வற்புறுத்துதல் காணலாம். "திருவாசகம் இங்கு ஒருகால் ஓதிற் கருங்கல் மனமும் கரைந்துகக், கண்கள் தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய, மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப்பு எய்தி அன்பராகுநர்..." எனச் சிவப்பிரகாசர் புகழ்ந்து போற்றி யுள்ளமையினை அனைவரும் அறிவர். இங்ஙனமே இராமலிங்க அடிகள் திருவாசகச் செந்தமிழ்மா மறையினைத் தம் உயிரினும் இனிய விழுமிய நூலாகத் தேர்ந்துகொண்டு, திறன்தெரிந்து பாராட்டியுள்ள செய்யுட்களையும் சைவத் தமிழுலகம் நன்கறியும்.

சுந்தரம் பிள்ளையின் புகழுரை: அண்மைக் காலத்தின் அரும்பெறல் ஆராய்ச்சிப் பேரறிஞராக விளங்கியிருந்த பேராசிரியர் மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை அவர்கள்,

"மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின் மாண்டோர்கள்
கனஞ்சடைஎன் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரே?"

எனத் திருவாசகத்தின் சிறப்பியல்பினைப் பெரிதெடுத்துரைத்துப் போற்றி மகிழ்கின்றார். இதன்கண், திருவாசகமானது "கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை வெள்ளத்து அழுத்தி" என்றாற்போல, ஓதுவோர் எவராயினும் அவர்தம் கல்லினும் வல்லென்ற மனத்தினையும் கரைந்துருகுமாறு நெகிழச் செய்து மெல்லிதாக்கி, அன்பு அருள் அறிவு முதலிய நற் பண்புகள் அனைத்தையும் வளர்க்கும் என்பார் "மனங்கரைத்து" என்றும்; அவ்வாறு மனங்கரைத்தலின் பயன் எல்லாத் துன்பங்களுக்கும் அடிப்படையான 'காம வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமங் கெடுதல்' என்பார் "மலங்கெடுக்கும்" என்றும்; இத்தகைய திருவாசகத்தின்கண் பெரிதும் ஈடுபட்டு அதனைப் பலகாலும் உள்ளமும் உயிரும் உணர்வும் ஒன்றப்

பயின்றேறி வருவார் 'அயல் மாண்டு அருவினைச் சுற்றமும் மாண்டு அவனியின்மேல் மயல்மாண்டு மற்றுள்ள வாசகம் மாண்டு என்னுடைய செயல் மாண்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ' என்றாற்போல, உயிரியல்பும் செயல்களுமெல்லாம் மாண்டொழிய இறையியல்பு தலைக் கூடி மாண்புறுவர் என்பார் "வாசகத்தின் மாண்டோர்கள்" என்றும்; 'அருச்சனை பாட்டே யாகும்' என்றதற் கேற்ப, இனிய எளிய சிறந்த திருவாசகத் திருமறையினைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி இடையறாது ஓதி இறைவனை வழிபடும் முறையினை உணர்ந்து கொண்டோர், இனிய பாலின் சுவை தெளிந்தோன் இன்னாத புளிங்காடியினைச் சென்று பருகானாதல் போல, "கனம்" "சடை" முதலிய வருத்தம் மிக்க கடினமான ஒலிப்பு முறைகளையுடைய பிறநூல்களைப் பிறர்போல வறிதே குழறியுரைப்பக் கருதவும் மாட்டார்கள் என்பார் "கனம் சடை என்றுருவேற்றி" என்றும்; அப் பிறநூல்களை மிகவும் முயன்று வருந்தி எத்துணை முறைதான் ஓதினும் அவற்றால் அவர்க்குப் பொருள் சிறிதும் விளங்காதென்பார் "கண்மூடி" என்றும்; சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லாத வழி அதனாற் பயனேதும் நிகழ்தலில்லையாகலின் அஃதொரு பயனில் வீண் செயலாய் அழுகையொலியே போலும் என்பார் "கதறுவரே?" என்றும் சுந்தரம் பிள்ளை அவர்கள் அருளிச் செய்திருக்கும் அழகும் அருமையும் அறிஞர்க்கு ஆராப்பெரு விருந்தாவன.

திருவாசகத்தின் சிறப்பியல்புகளுள் மிக முதன்மையான இவ்வுருக்கத் தன்மையினைச் செவ்விதின் விளக்கும் சில தொடர்கள் வருமாறு :

1. புன்மையேனை ஆண்டு ஐயா புறமே போக விடுவாயோ? 2. தேசனே அம்பலவனே செய்வதொன்றும் அறியேனே! 3. என்னை நோக்குவார் யாரே? என் நான் செய்கேன் எம் பெருமான்? 4. எந்தாய் எங்குப் புகுவேனே? 5. அடியேன் அல்லேன் கொல்லோ? தான் எனை ஆட்கொண்டிலை கொல்லோ? 6. சகந்தான் அறிய முறையிட்டால் தக்கவாறு அன்று என்னாரோ? 7. அருளாதொழிந்தால் அடியேனை அஞ்சேல் என்பார் ஆர் இங்கு? 8. செத்தே போனால் சிரியாரோ? 9. நரிப்பாய் நாயேன் இருப்பேனோ? 10. அடி

யேனும் அயலார் போல அயர்வேனோ? 11. அழுமதுவே யன்றி மற்று என் செய்கேன்? 12. யாதுநீ போவதோர் வகை எனக்கருளாய்! 13. ஐயனே என்றுன் அருள்வழி இருப்பேன். 14. என் செய்கேன்? இது செய்க என்றருளாய்! 15. சேயனுகி நின்று அலறுவது அழகோ? 16. அடியனேன் இடர்ப்படுவதும் இனிதோ? 17. ஆரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன் ஆண்ட நீ அருளிலையானால்? 18. பிழைத்தால் பொறுக்க வேண்டாவோ? 19. முறையோ என்று அழைத்தால் அருளாது ஒழிவதே? 20. திகைத்தால் தேற்ற வேண்டாவோ? 21. புறம்போகேன் புறம்போகல் ஒட்டேனே! 22. பிரியேன் என்றென் றருளிய அருளும் பொய்யோ? 23. படுவேன் படுவதெல்லாம் நான் பட்டால் பின்னைப் பயனென்னே? 24. நடுவாய் நில்லா தொழிந்தக்கால் நன்றோ எங்கள் நாயகமே! 25. சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ? 26. தயாநீ என்பால் இல்லையே! 27. நாயேன் அடிமை யுடனாக ஆண்டாய் நான்றான் வேண்டாவோ? 28. கொடியேன் கெடவே அமையுமே! 29. ஆவா என்னுவிடில் என்னை அஞ்சேல் என்பார் ஆரோதான்? 30. சாவாரெல்லாம் என்னகவோ? தக்கவாறு அன்று என்னாரோ?......

என்பன போன்று பலபட வரும் இத்தொடர்கள் எத்துணை உருக்கத்தன்மை மிகுந்துள்ளன! திருவாசகத்தின்கண் இடையிடையே இவ்வாறு வரும் தொடர்கள் பலவற்றின் இடங்களையும், அவற்றின் முன்பின் இயைபுகளையும், பொருள் நலங்களையும் எண்ணி எண்ணிப் பார்க்கலுறின் கல் நெஞ்சமும் கரைந்துருகும் என்பதில் ஐயமென்னை?

அயரா அன்பு: திருவாசகத்தின்கண் காணப்படும் சிறப்பியல்புகளுள் ஒன்று, அதன் அயரா அன்பின் திறனாகும். அன்பின் ஆற்றலினை அறியாதார் யாருமிலர். 'அன்பே சிவம்' என நமது சமய குரவர்கள் வற்புறுத்திப் போந்தனர். "அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார் மறத்திற்கும் அஃதே துணை" எனத் திருவள்ளுவர் அன்பின் திறனைத் தெற்றெனத் தேற்றினர். உயிர்களின் எண்ணிறந்த பல உணர்ச்சிகளுளெல்லாம் அன்பே தலைசிறந்ததும் இறைமைத் தன்மை வாய்ந்ததுமாகத் திகழ்கின்றது. அன்புணர்ச்சி மேலோங்க மேலோங்க, ஏனைத் தீயுணர்ச்சி

கள் தேய்ந்தொழிந்து, மனிதன் இறை நிலைக்கு முறை முறையே உயர்ந்துயர்ந்து செல்கின்றான்.

"இன்பம் என்பது எல்லா உயிர்க்கும், தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும்" எனத் தொல்காப்பியனார் கூறுவது போல, உயிர்களெல்லாம் விழைந்து நிற்கும் இன்பப் பேற்றிற்கு உறுபெருங் கருவியாய் அமைவது அன்பே யாகும். அன்புணர்ச்சி பெருகி, ஒற்றுமை நட்பு உரிமை உறவு காதல் என்னும் இவை நிகழும் இடங்களில், இன்பம் களிநடம் புரிகின்றது. அன்புக்கு மாறாய வன்புணர்ச்சி மிக்குழிப் பொறாமை பகைமை பூசல் சூழ்ச்சி பிணக்கு காழ்ப்பு அலை கொலை முதலிய கொடுஞ்செயல்களும் துன்பமுமே துணங்கைக் கூத்தாடுகின்றன. "இன்பமே என்னுடையன்பே" என மணிமொழியாரும், "அன்பினால் இன்பம் ஆர்வார்" எனச் சேக்கிழாரும் கூறுதலால், இன்பம் அடைதற்குரிய நெறி அன்பு நெறியே யாதல் பெறப்படும். இத்தகைய அன்புணர்ச்சியினையே முதலும் இடையும் முடிவுமாம் அடிப்படைப் பொருளாகக் கொண்ட நூல் திருவாசகமே எனின், அதன் சிறப்பிற்குக் காரணம் கூறுதல் வேண்டுமோ என்பது. திருவாசகத்தின் பொருள் அன்பே வடிவமான சிவம்; திருவாசகத்தைப் பாடியவர் அன்பின் பிழம்பே எனத் தகைய மாணிக்கவாசகர்; திருவாசகப் பாடல்கள் அன்புணர்ச்சி பெருக்கு எடுத்தோடும் அரும்பெறற் கவிதைவெள்ளம் எனின், வேறு பிறிது கூறுவது யாதுளது?

திருவாசகம் போல வேறெந் நூலும் அன்பினை வலியுறுத்தி அடுத்தடுத்துக் குறிப்பிட்டுப் பலபடியாக எடுத்துமொழிந்ததனை நாம் யாண்டும் காண்கிலம். திருவாசகத்திற்கு அடுத்தாற்போல அன்பினை வலியுறுத்திச் சிறந்தெடுத்துப் பேசுதலில் முதன்மை மிக்கது பெரியபுராணம் ஒன்றுமட்டுமே யாகும்!

1. *நின்றன் வார்கழற்கு அன்பு எனக்கு நிரந்தரமாய் அருளாய்* 2. *அன்பு நின்கழற்கணே புணர்ப்பதாக* 3. *வேண்டும் நின்கழற்கண் அன்பு* 4. *இல்லை நின்கழற்கு அன்பது என்கணே* 5. *இடையறா அன்பு உனக்கென் ஊடகத்தே நின்றுருகத் தந்தருள்* 6. *ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு அன்புஇலை* 7. *அலவா நிற்கும் அன்பிலேன்*

8. நெகும் அன்பு இல்லை நினைக்காண 9. மெய்யன்பு பெறவே வல்லேனல்லா வண்ணம் பெற்றேன் யான் 10. அணியார் அடியார் உனக்குள்ள அன்பும் தாராய் 11. யானே பொய் என் அன்பும் பொய் 12. நான் தனக்கு அன்பின்மை நானும் தானும் அறிவோம் 13. கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு இன்மை கண்டபின் 14. மெய்கலந்த அன்பர் அன்பு எனக்கும் ஆகவேண்டுமே 15. தொண்டனேற்கும் உண்டாங்கொல் வேண்டாதொன்றும் வேண்டாது மிக்க அன்பே மேவுதலே 16. பெறவே வேண்டும் மெய்யன்பு போரா ஒழியாப்பிரிவில்லா, மறவா நினையா அளவில்லா மாளா இன்ப மாகடலே.......

என்றிங்ஙனம் அடுத்தடுத்துப் பலகாலும் அன்பினைத் திருவாசகம் எண்ணிறந்த இடங்களிற் குறிப்பிடுமாறு போலத் தமிழ்நூல் பிறிதொன்றும் குறிப்பிடுகின்றிலது. மாணிக்கவாசகர் போல, இறைவன்பால் தமக்கு அன்பு சிறிதும் நிகழ்கின்றிலதென்றும், தமது அன்பு வெறும்பொய் யன்பே மெய்யன்பு அன்று என்றும், இறைவனே தமக்கு மெய்யன்பு நிகழ அருள் செய்தல் வேண்டும் என்றும் அன்பால் அகங்குழைந்துருகி அழுதழுதாற்றிப் புலம்பிப் பாடிய உண்மையன்பர் வேறு பிறர் எவரும் இலர். ஆதல் பற்றியே கவிஞர்களுள் 'கற்பனைக் களஞ்சியம்' என்னும் சிறப்பியற்பெயர் எய்திய துறைமங்கலம் சிவப் பிரகாசர் "அருங்கவி வாத வூரனே முதலோர் அன்பிலேம் என்றது வேண்டி இரங்குதல் பொய்ம்மை, அன்பிலேன் எனயான் இயம்பலே மெய், எனக்கு அருளாய்" என்று அழகுபட அருளிச் செய்தனர். இவ்வாற்றால் திருவாசகம் அன்பினையே அடிப்படையாகக் கொண்ட பேரிலக்கிய மாதல் தெளிக.

தாழ்வெனும் தன்மை : திருவாசகத்தின் சிறப்பியல்பு கள் பலவற்றுள் அதன்கட் பெரிதும் காணப்படும் தாழ் வெனும் தன்மையும் ஒன்றாகும். "வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித், தாழ்வெனும் தன்மை யோடு சைவமாம் சமயம் சாரும், ஊழ்பெறல் அரிது" என அருணந்திசிவனார் கூறுதலின், சைவ சமயத்திற்குத் தாழ் வெனும் தன்மை மிகமிக இன்றியமையாத தென்பது பெறப்படும். இத் தாழ்வெனும் தன்மை அறிவின்

உயர்ந்து தம் குற்றங் குறைகளைத் தாமே கண்டுணர வல்ல நல்லார்க்கே அமைவதாகும். ஏனையோர் அதனை வாய்ப்பப் பெறாது செருக்கும் சினமும் சிறுமையுமுற்றுச் சிதைந் தொழிவர். "நான் எனது குற்றங்குறைகளை என் உள்ளம் வருந்தும் அளவிற்கு நன்றாக உணர்ந்திருக்கின்றேன். அங்ஙனம் உணர்ந்திருப்பதில் தான் யான் பெற்றுள்ள ஆற்றலெல்லாம் அமைந்து கிடக்கின்றது ! ஏனெனில், ஒரு மனிதனுக்குத் தன் குற்றங்களைத் தானே உணர்ந்து கொள்ளுதல் ஓர் அருஞ்செயலாகும்"* எனவரும் காந்தி அடிகள் கூற்றும் ஈண்டுணரற்பாலது.

இங்ஙனம் தமது குற்றங்குறைகளைத் தாமே உணர வல்ல பெருமக்களே 'குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமுதாய்க் குணப்பெருங் கடலாய' இறைவனின் பெருமை களை யுணர்ந்து, அவனை வழிபட்டுய்யும் பெறலரும் பேறு பெறுவர். இறைவனருள் பெற்று அவனை நேரிற் கண்ணாரக் கண்டு அவனது அளப்பரும் பெருமைகளை அறிந்துணர்ந்தோர்க்கே, தமது சிறுமையும் புன்மையும் இழிவும் இனையவென முழுவதும் தெரிந்து தெளிதல் இயலும். மாணிக்கவாசகர் இறைவன் பெருமை யுணர்ந்த வாற்றால் தமது சிறுமை தெளிந்தவர் ; தம் சிறுமை யறிந்து இறைவன் பெருமை யுணர்ந்தவர். "பணியுமாம் என்றும் பெருமை" என்பதற்கு மாணிக்கவாசகரே சிறந்த எடுத்துக் காட்டாக இலங்குகின்றார். தாழ்வெனும் தன்மை தோன்ற அவர் தம்மை எங்ஙன மெல்லாம் இழித்துரைத்துப் பழித்துக் கொள்கின்றார் எனக் கருதிக் காண முயறலும், நம்மனோர் அவர்தம் பெருமையினை யுணர்தற்கு ஒரு நல்ல வாயிலாகும்.

1. பொல்லா வினையேன் 2. எஞ்ஞானம் இல்லாதேன் 3. வல்வினையேன் 4. நலந்தான் இலாத சிறியேன் 5. நாயிற் கடையாய்க் கிடந்த அடியேன் 6. பிழைப்பு வாய்ப்பொன்றறியா நாயேன் 7. அவமே பிறந்த அருவினையேன் 8. யாவரி

---

*"I am painfully conscious of my imperfections and therein lies all the strength I possess, because it is a rare thing for a man to know his own limitations"—*Gandhiji.*

றும் கடையனாய நாயினேன் 9. அவாவெள்ளக் கள்வனேன் 10. இரண்டுமிலித் தனியனேன் 11. கல்வகை மனத்தேன் 12. எட்டினோடிரண்டும் அறியேன் 13. யாதும் ஒன்றல்லாப் பொல்லா நாயான நீசனேன் 14. செய்வதறியாச் சிறுநாயேன் 15. பொய்யர் பெறும் பேறத்தனையும் பெறுதற்குரியேன் 16. ஊர் நாயிற்கடையானேன் நெஞ்சுருகாதேன் கல்லாம் மனத்தேன் கசியாதேன் 17. பொல்லா நாயான புன்மையேன் 18. நாணமில்லா நாயினேன் 19. இருப்பு நெஞ்ச வஞ்சனேன் 20. என் நாண் இல்லா நாயினேன் 21. பழுதே பிறந்தேன் 22. வஞ்சகப் பெரும் புலையனேன் 23. யாரினும் கடையனாயி னேன் 24. பிழையே பெருக்கிச் சுருக்கும் அன்பின் வெற்றடி யேன் 25. தருக்கித் தலையால் நடந்த வினைத்துணையேன் 26. கல்லாமனத்துக் கடைப்பட்ட நாயேன் 27. வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் 28. கள்வன் கடியன் கலதி 29. ஏழைத் தொழும்பனேன் 30. பொல்லாக் கல்விஞானமிலா அழுக்கு மனத் தடியேன் 31. கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேன் 32. ஆதமிலி நாயேன் 33. பயனிலியாய்க் கிடப்பேன் 34. பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும் புழுத்தலைப் புலையனேன் 35. மண்ணிலே பிறந்து மண்ணாவதற்கு ஒருப்படுகின்றேன்......

தாழ்வெனும் தன்மை தோன்ற இத்தகைய பலப்பல சொற்றொடர்கள் திருவாசகத்துள் ஆங்காங்கு மிக்கு விரவி நிரம்பிக் காணப்படுகின்றன. தம்மைப் பழித்துரைத்துக் கொள்ளுதலிலும், அடிகள் வகை வகையான புதிய புதிய வெவ்வேறான சொற்கள் சொற்றொடர்கள் பலப்பலவற்றை வழங்கியருளும் திறம், மிக்க இலக்கிய நயமும் சிறந்த கவிதைத் திறனும் வாய்ந்து நம்மை வியப்பிடை வீழ்த்தி மகிழ்விக்கின்றது. திருவாசகப் பெருநூற்கு இஃதொரு தனிச்சிறப்பாம் என்று கடைப்பிடிக்க.

அழுதடி யடையும் அன்புநெறி : ஏனைய நூல்கள் எல்லாம் பெரும்பாலும் மக்களின் பொழுது போக்குக்கும் அறிவு வளர்ச்சிக்கும் மட்டுமே ஓரளவு துணை செய்வன வாய்க் கழிந்தொழியத், திருவாசகமோ மக்கட்கு உய்யும் நெறி இதுவென்று உணர்த்தி, அவர்தம் வாழ்க்கையை மாற்றித் திருத்தி அமைத்துத் தூயதாக்கி இறைமாட்சிமை

யின் இருத்தி வயங்கவைக்கும் பெருஞ்சிறப்புடையது. தவறு செய்வதே மனிதனது இயற்கையாய்ப் பெரிதும் இருக்கின்றது. காம வெகுளி மயக்கங்கள் அவனைப் பெரிதும் அலைக்கழித்து வருத்துகின்றன. ஐம்புலக் குறும்பர்களிடை அகப்பட்டுக் கொண்டு அவன் எய்தும் இடர்ப்பாடுகட்கு அளவே இல்லை.

"அழுக்குடைப் புலன்வழி இழுக்கத்தின் ஒழுகி
வளைவாய்த் தூண்டிலின் உள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்,
மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும்,
ஆசையாம் பரிசத்து யானை போலவும்,
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்,
வீசிய மணத்தின் வண்டு போலவும்"

மக்களனைவரும் ஐம்பொறிகளாற் பெரிதும் மயங்கித் துன்புற்று வருகின்றனர். இவ்வாற்றால் மனிதன் நாணாளும் தீவினையே செய்துழல்கின்றான். ஒழுக்கநெறியினின்றும் இடையிடையே வழுக்கி வழுக்கி விழுகின்றான். ஒரோவழி அறிவானது கிளர்ந்தெழுந்து திருத்த முயலினும், பண்டு தொட்டுப் பழகிப் போந்த தீவினைப் பயிற்சியின் வன்மையே மேலோங்கி நின்று, அவனைக் கீழறுத்துக் 'கெடுத்தாய் என்னைக் கெடுமாறே' என்றாற்போலக் கேடு செய்கின்றது.

இந்நிலையில் மனிதன் திருந்தி உய்தற்குரிய நெறி, தான் செய்த தவறுகளை யெல்லாம் உள்ளவாறு உணர்ந்து மனமார வருந்தி இறைவன்பால் மன்னிப்பு வேண்டிப் பல்காலும் அழுதழுதாற்றிப் புலம்புதலும், மறந்தும் இனித் தான் தவறுகள் செய்யா திருப்ப இறைவன் திருவடிகளையே "தாயுடன் றலைக்கும் காலும் வாய்விட்டு, அன்னாய் என்னும் குழவிபோல"த் தழீஇத் துணையாக இறுகச் சிக்கெனப் பிடித்துக் கொள்ளுதலுமே யாகும். தவறு செய்துழலும் நம்மனோர் திருந்தி இறையருள் பெற்றுய்தற்கு இதனினும் சிறந்த நன்னெறி வேறொன்றில்லை. இச்செந்நெறியைத் தாமும் உணர்ந்து உலகுக்கெல்லாமும் உணர்த்திய பெருமை 'அழுதடி யடைந்த அன்ப'ராய மாணிக்கவாசகர்க்குரியது எனலாம்.

"ஊனா யிலக்கக் குருட்டா யிலைத்தின் குன்தாள் இணையன்புக்கு
ஆனாய் அடியேன் அயலே மயல்கொண் டழுகேனே."

"அழுகேன் நின்பால் அன்பாம் மனமாய்"

"யானே பொய்என் நெஞ்சம் பொய்என் அன்பும் பொய்
ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே"

"முழு முதலேஐம் புலனுக்கும் மூவர்க்கும் என்றனக்கும்
வழிமுதலே நின் பழவடி யார்திரள் வான்குழுவுக்
கெழுமுத லேயருள் தந்திருக்க இரங்குங் கொல்லோஎன்று
அழுமது வேயன்றி மற்றென் செய்கேன் பொன்னம்பலத்
[தரைசே"

எனவரும் திருவாசகப் பகுதிகள் அச்செந்நெறியின் சிறப்பினை எத்துணை அழகுற விளக்கி நம்மனோர் உள்ளத்தை உருக்குகின்றன! மாணிக்கவாசகர் போல இறைவன்பால் இங்ஙனம் தம் குறைகளையும் பிழைகளையும் முறையிட்டு அழுதழுதாற்றிப் பின்னர் நிறைவுற்ற சான்றோர் பிறரெவரும் இலர். இவ்வாறு மக்கள் தம்குறையுணர்ந்து வருந்தி, இறைவன்பால் முறையிட்டுத் திருந்தி நிறைவெய்தும் நெறியினை முதன் முதல் உணர்த்திய நூல் திருவாசகமே யாம் எனலாம்.

பொய்யிருள் கடியும் மெய்ச்சுடர் நூல்: திருவாசகம் பொய்ம்மையைக் களைந்து மெய்ம்மையை விழைந்து நிற்கும் ஒரு சிறந்த ஞானப் பெருநூலாகும். பொய்ம்மையை விரும்புபவரும் மெய்ம்மையை வெறுப்பவரும் இவ்வுலகில் எவரும் இலர். "பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற, செய்யாமை செய்யாமை நன்று" எனவும் "யாம் மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும், வாய்மையின் நல்ல பிற" எனவும் திருவள்ளுவர் கூறுவர். "பொய்தீர் ஒழுக்க நெறி" என்றதனால், பொய்ம்மை தீர்ந்த ஒன்றே ஒழுக்க நெறியாதல் பெறப்படும். நாமெல்லாம் நம் அறிவும் உளமும் ஒருவழி ஈர்ப்ப, பொறியும் புலன்களும் பிறவும் பிறிதொரு வழியில் ஈர்ப்ப, இடையே நின்று

செயலற்று வருந்தித் திகைத்துப் பெரும்பாலும் பொய் வாழ்க்கையே வாழ்ந்து வருகின்றோம். நம் உள்ளம் நினைப்ப தொன்றும், வாய் பேசுவது பிறிதொன்றும், உடல் செய்வது வேறொன்றுமாகவே பெரும்பாலும் இருக்க நம் வாழ்க்கை எங்ஙனமோ ஒருவாறு கழிந்துகொண்டிருக் கின்றது! இத்தகைய பொய் வாழ்க்கை ஒழிந்து மெய் வாழ்க்கையின் மேவி மிளிர்தல் வேண்டும் என்றே திருவாசகம் அலறிக் கதறி ஆண்டவனை வேண்டுகின்றது.

1. பொய்யாயின எல்லாம் போயகல வந்தருளி 2. பொய் தான் தவிர்ந்து உன்னைப் போற்றி 3. பொய்யர் பெறும் பேறு அத்தனையும் பெறுதற்குரியேன் 4. போற்றி என் போலும் பொய்யர் தம்மை ஆட்கொள்ளும் வள்ளல் 5. பொய் கலந்த தல்லதில்லை பொய்ம்மையேன் என் எம்பிரான் 6. விச்சுக்கேடு பொய்க்காகா தென்றிங்கெனை வைத்தாய் 7. சிவமாநகர் குறுகப் போனார் அடியார் யானும் பொய்யும் புறமே போந்தோமே 8. புறமே போந்தோம் பொய்யும் யானும் 9. யானே பொய் என்நெஞ்சும் பொய் என்அன்பும் பொய் 10. பொய்யில் இங்கெனைப் புகுதவிட்டு நீ போவதோ சொலாய் பொருத்தமாவதே 11. பொருத்தமின்மையேன் பொய்ம்மை யுண்மையேன் 12. பொய்யவனேனைப் பொருள் என ஆண்டொன்று பொத்திக் கொண்ட மெய்யவனே 13. பொய்யிருள் கடிந்த மெய்ச்சுடரே 14. மெய்ப் பொருட் கண் தோற்றமாய் மெய்யே நிலை பேறாய் 15. மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே......

என்பன முதலாகப் பலப்பல குறிப்புகள் திருவாசகத்துட் போதருதல் காணலாம். மாணிக்கவாசகர்க்குப்'பொய்ம்மை' யின்பால் உள்ள வெறுப்பும், 'மெய்ம்மை'யின்பால் உள்ள விருப்பும் இவற்றால் நன்கினிது புலனாகின்றன. தம் மாட்டுள்ள பொய்ம்மைகள் ஒழிந்து, தாம் மெய்ம்மை நிலையின் மேவி வீற்றிருந்து விளங்குதற்கு அருள் செய்தல் வேண்டும் என அடிகள் மிகவும் ஆராமையோடு இறை வனைப் பெரிதும் வேண்டி நிற்றலைத் திருவாசகத்தின்கண் யாண்டும் காணலாம்.

இச்சிறப்புடைமை கருதியே "பொய்யடிமை இல்லாத புலவர்" எனச் சுந்தரமூர்த்திகள் பாடிப் பாராட்டியது

மாணிக்கவாசகரையே யாதல் வேண்டும் என அறிஞர்கள் சிலர் கருதுவாராயினர் போலும்! 'பொய்யடிமை இல்லாத புலவர்' எனப்பட்டவர் மாணிக்கவாசகரேயாயினும் ஆகுக! அன்றி வேறு பிறர் எவராயினும் ஆகுக! "பொய்யடிமை இல்லாத புலவர்" என்னும் தொடரோடு இயைபுபடுத்தி மாணிக்கவாசகரை அறிஞர் பெருமக்கள் சிலர் நினைவு கூர்ந் தனராகலின், மாணிக்கவாசகர் பொய்யடிமை இல்லாத மெய்யடியவர் என்பதும், சிறந்த பெரும்புலமை வாய்ந்த பெருந்தகையார் என்பதும் எவரும் ஒப்ப முடிந்த பேருண் மையாதல் பெறப்படுகின்றது. எனவே, பொய்யடிமை இல்லாத புலமை வாழ்க்கையை விரும்பும் எவர்க்கும் திருவாசகம் ஒரு பெருந்துணையாகும் என்பதுணரற்பாற்று.

பிற சிறப்பியல்புகள்: இங்ஙனம் திருவாசகத்தின்கண் காணப்படும் சிறப்பியல்புகள் பலப்பல. திருவாசகம் பிறவி யறுக்கும் ஒரு பெரு நூலாகும். "பாருரு வாய பிறப்பற வேண்டும் பத்திமையும் பெற வேண்டும்" என்று இறை வனைத் திருவாசகம் பலபடியாகப் பாடிப் பரவுதலை, அந் நூல் முழுவதும் காணலாம். இம்மட்டோ! "அருபரத் தொருவன் அவனியில் வந்து குருபரன் ஆகி அருளிய பெருமையை" விளக்கும் இயல்பிலும் திருவாசகம் சிறப் புடையதாக விளங்குகின்றது. மாணிக்கவாசகர்க்கு ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத் தம் முதலே குருவு மாய்த் தவத்தினில் உணர்த்திய தன்மையினையும்; ஊனக் கண் பாசம் உணராப் பதியை அவர் ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி, உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவிப் பதி தண்ணிழலாகும் வண்ணம் அவர் அஞ்செழுத்தை விதியின் எண்ணியவாற்றினையும்; அவனே தானே ஆகிய அந்நெறி அவர் ஏகனாகி இறைபணி நிற்க, அவர்க்கு மல மாயை தன்னொடு வல்வினை இன்றாயினமையினையும்; அவர் அயரா அன்பின் அரன்கழல் செலும் நிலை எய்தியமையினை யும்; செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ, மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் என அவர் தொழுதமையினையு மெல் லாம் தெள்ளத் தெளிய விளக்குதலால், திருவாசகம் ஒப் புயர்வற்றதொரு சைவ சித்தாந்தச் செம்பொருள் நூலாக வும் திகழ்கின்றது.

இனி, இவற்றினையெல்லாம் விடத் திருவாசகத்தின் சிறப்பியல்புகளுள் சிறப்பானதாகக் குறிப்பிடற்பாலது, அதன் கண் இளமகளிர்கள் தம்முள் விளையாடி மகிழ்தல் போல வைத்துத் திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோள்நோக்கம், திருப்பொன்னூசல், அன்னைப் பத்து, குயிற்பத்து முதலிய திருப்பதிகங்கள் அருளிச் செய்யப் பெற்றிருத்தலேயாகும். சிறு மகாஅர்கட்கு விளையாட்டு முறையின் வைத்தே கல்வி பயிற்றல் வேண்டும் (Play-way method) எனக் கட்டுரைக்கும் நல்லறிஞர் பலரும், அடிகள் இங்ஙனம் மகளிர் விளையாட்டின்கண் வைத்து அரிய பெரிய மெய்ப்பொருட் கருத்துக்களை நம்மனோர்க்கு மிக எளிய இனிய முறையிற் கூறிக் கற்பித்துச் சென்றிருக்கும் திறம் நினைந்து வியவாதிரார். இக்கால நாட்டு மக்கட் பாடல்கள் (Folk-songs) போல மகளிர் விளையாடல்களில் வைத்து அழகிய இனிய கவிதைகள் அமைந்துள்ளமையினால், திருவாசகத்தின் இலக்கியச் சிறப்பும் கவிதைச் சிறப்பும் மிக்கு விளங்குவதோடு, அது தாய்மைக்குரிய பெண்மை நலத்தினைத் தூய்மையுறப் போற்றியுள்ள சிறப்பும் உடையதாக வீறுற்றொளிர்ந்து விளங்குகின்றது!

முடிவுரை: இத்தகைய பலபெருஞ் சிறப்பியல்புகளையுடைய திருவாசகத் தென்றமிழ் மாமறையினைத் தமிழர் அனைவரும், தக்கவாறு போற்றி ஓதி நலம் பெறும் கடப்பாடுடையராவர்!

உள்ளம் உருக்கி உணர்வைச் சிவமாக்கும்
தெள்ளு தமிழ்த்திரு வாசகம்தான்—மெள்ளமிக
நம்மை மலங்கெடுத்து நல்லவெல்லாம் எய்துவித்துச்
செம்மையுறு விக்கும் தெளி! —முருகவேள்

---

# மெய்கண்டார் காலச் சூழ்நிலை

(நல். முருகேச முதலியார், பி.ஏ.)

ஸ்ரீ மெய்கண்டார் காலத்துத் தத்துவ உலகத்தின் நிலையை அவர் சிவஞானபோத சூத்திரங்களுக்குச் செய்துள்ள அவையடக்கம் சுருங்கச் சொல்லி விளக்குகின்றது. ஆன்மிக நூல்களை இயற்றுபவர்கள், அவைகளை யறியவல்ல அதிகாரிகளையும் குறிப்பிடுவது மரபு. உதாரணமாக, ஸ்ரீ சங்கரர் 'ஆத்மபோதம்' முதல் சுலோகத்தில் தம்முடைய நூலைத் தவமுடையவர்களுக்கும், சாந்தமுடையவர்களுக்கும், ராகத் துவேஷ மற்றவர்களுக்கும், முமுக்ஷுத்வத்தை அபேக்ஷிப்பவர்களுக்கும் இயற்றுவதாகக் கூறியுள்ளார். ஆனால் அவர் தம்முடைய கிரந்தத்தை அக்காலத்து உலகம் ஏற்குமா ஏற்காதா என்று ஒன்றும் குறிப்பிடவில்லை. சங்கரர் காலத்துக்கும் மெய்கண்டார் காலத்துக்கும் இடையே வந்த குழப்பத்தையே மெய்கண்டார் அவையடக்கச் செய்யுளில் குறிப்பிட்ட 'உடங்கியைந்து தம்மிற் புணராமை' தெரிவிக்கிறது போலும்! அன்றியும், அவர் அவையடக்கச் செய்யுளில் தம் நூலைக் குறிப்பிட்டு ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. தம்மை யுணர்ந்து தம் தலைவனையும் உணர்ந்தோர், நூலாசிரியராகிய தம்மை இகழமாட்டார்கள் என்று மட்டும் அவையடக்கம் கூறுகிறார். ஏனெனில் தாம் இயற்றிய நூல் இறைவனால் இயம்பப்பட்டது. அன்றியும் தம்மையுணர்ந்து தமையுடைய தலைவனையும் உணர்ந்தவர்கள், ஆன்மலாபப் பேறுடைய சிவசம்பந்திகள் ஆகையினால் அன்னார் தம்மை உடையராந் தன்மையார்கள். எனவே, மெய்கண்டார் தாம் இறைவன் அருளுக்கு ஒரு கருவியாகவே இருந்து இந்நூலை இயற்றினர் என்பது வெளிப்படை. தற்போதத்தில் எழுந்த நூல் அல்லாமையினாலே, இகழ்ச்சிக்கு இடம் இல்லை என்பதும் உணரப்படும்.

அவையடக்கச் செய்யுளில் முக்கியமாக இரண்டு கருத்துகள் ஆராய்ச்சிக்கும் சிந்தனைக்கும் உரியன. முதலாவது ஒரு சாரார் தம்மை இகழவும் கூடும் என்ற ஐயப்பாட்டைக் குறிப்பிடுவது. மற்றொன்று தம்மை

இகழக்கூடியவர்கள், தமக்குள்ளேயே ஒருவரை ஒருவர் மறுத்துக் கலாம் விளைத்து உண்மைப்பொருளை உணராதவர் களென்று உறுதிப்பாட்டுடன் கூறியுள்ளது. இவ்விரண்டு கூற்றுகளின் ஆராய்ச்சி மெய்கண்டார் இறைவன் அருள் பெற்ற ஞானசிரியர் என்றும், அவர் தெரிவித்த சிவஞான போதம் இறைவனால் இயம்பப்பட்டது என்றும் தெள்ளிதில் வெளிப்படுத்தும். இவ்விரு விஷயங்களின் ஆராய்ச்சிக்கு ஸ்ரீ சிவஞான யோகிகள் அருளியுள்ள மாபாடியத்துள் அவையடக்க விளக்கப்பகுதி அடிப்படையான பொருட் செறிவைத் தருகிறது.

ஆனால் ஸ்ரீ மெய்கண்டார் இகழ்ச்சிக் குறிப்பை நவின்றது எதன்பொருட்டு என்பதை மாபாடியத்திலிருந்து ஊகித்து அறிவதற்கில்லை. தம்முடைய காலத்தில் மெய்கண்டாரைப் புறச்சந்தான முதற்குரவர் என்பதை எவராயினும் மறுத்திருப்பார்களோ என்னவோ தெரிய வில்லை. மங்கலவாழ்த்திலேயே இந்நூலை நந்தியெம்பெரு மானுக்கு அறிவுறுத்தருளியவர் சிவபெருமான் என்று உணர்த்தியுள்ளார். எனவே அந்நூலை உணரவல்லோர் குருமுகத்தால் கேட்டோரே என்று பெறப்படுகிறது. பின்னர் ஸ்ரீ அருணந்தி சிவம் அருளிய சிவஞான சித்தியார் நூற் சிறப்புப் பாயிரத்தில் சிவபெருமான் நந்தியெம்பெரு மானுக்குச் சொல்ல, நந்தியெம்பெருமான் சனத்குமார ருக்குக் கூற, அவ்வழி மெய்கண்டார் கொண்டார் எனக் கூறியுள்ளார். இந்தச் செய்தி சிவஞானபோதப்பாயிரத்தில் கூறப்படாமையால் அதை ஏற்றுக்கொள்ளத்தக்கதில்லை யென மறைமலையடிகள் கருதியுள்ளார். மெய்கண்டாரே தம் ஆசிரியரின் பெயரைக் கூறியிருக்கக்கூடும். எனவே அருணந்தியார் கூற்றுப் பொருந்தாது எனக் கருதுவர் மறைமலை அடிகளார். ஸ்ரீ உமாபதிசிவம் தம் சிவப்பிரகாசப் பாயிரத்தில் இன்னும் இரு முனிவர்களை (சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி மாமுனிகள்) காரணராக, புனைந்து கூறியுள்ளார் எனவும் அடிகளார் கருதுவர். (இதன் விரிவான விவாதத்தை அடிகள் சிவஞானபோத ஆராய்ச்சி 251—258 பக்கங்கள் பார்க்க.) மெய்கண்டார் அவதார வரலாறே ஒரு அதிசயமான ஒன்றாதலால் இவ்விஷயங்களைப் பற்றி முடிவாக ஒன்றும் கூறுவதற்கு இயலாது. ஸ்ரீ

அருணந்தி சிவத்தையும் குறை கூறுவது தகுதியல்ல. அவர் இலரேல் மெய்கண்டாரின் பெருமையை இன்றும் உலகம் அறிந்திருக்காது.

ஸ்ரீ மெய்கண்டாரை ஸ்ரீ நீலகண்ட சிவம் தம் பிரம சூத்திர பாடியத்தில் தமக்குக் குருவாகக் குறித்துள்ள 'ஸ்வேதகன்யர்' எனவும் சிலர் கருதுகின்றனர். ஸ்ரீ நீலகண்ட சிவமும் ஸ்ரீ மெய்கண்டாரைப் போலவே முதல் வருணத்தர் அல்லர் என்றும் ஒரு துணிபு உண்டு என்பதைப் பேராசிரியர் ஸ்ரீ சூரியநாராயண சாஸ்திரிகள் தம் "ஸ்ரீகண்டர் சிவாத்துவிதம்" என்ற நூலில் விளக்கியுள்ளார் (பக்கங்கள் 19—21 பார்க்க). ஆனால் ஆகமங்கள் சத்திநிபாதம் பெற்ற யாவர்க்கும் பொதுவென்று அக்காலத்திலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது எனத் தெரிகிறது. மேலும் ஜனஸ்ருதி பவுத்திராயனத்தில் வருணம் வேதாகமப் பயிற்சிக்குத் தடையில்லை எனவும் தெரிகிறது. ஒரு சமயம் சாதிப் பூசல்களினாலோ, அல்லது அக்காலத்து அரசர்களோ, பார்த்தால் மெய்கண்டாரை இகழ்ந்தார் சிலர் பலர் அக்காலத்தில் இருந்திருப்பார்களோ என்னவோ தெரியவில்லை. ஸ்ரீ அருணந்தி சிவம் அக்காலத்தில் 'தானுகம விதாயி' எனப் பேர் பெற்றிருந்தாலும், அவரே தாம் மெய்கண்டாருக்குமாணவரானதாலும் பின்னல் இந்தக் குழப்பம் தீர்ந்திருக்கக்கூடும். ஆனால் ஸ்ரீ மெய்கண்டார் கொள்கை இந்த விஷயங்களினால் ஒரு சிறிதும் பாதிக்கப்படவில்லை யென்று நன்கு விளங்குகிறது. எனெனில் அவர்கள் அவையடக்கச் செய்யுளின் முதலடியில் சந்தான பரம்பரையைப் பற்றி ஒருசிறிதும் பொருட்படுத்தவில்லை. சிவதரிசனத்தால் ஆன்ம தரிசனமும் ஆன்ம சுத்தியும் பெற்றுச் சிவப் பேற்றுக்குப் பாத்திரர்களாக உள்ளவர்களே தம்மைஇகழ மாட்டார்கள் எனக் கூறுகிறார்கள். எனெனில் தாம் கூறுவது நந்தி முனிகணம் முதல் புலவர் வழிவழி சொல்லி மண்ணுலகம் பெற்றது என்று முதல் சூத்திரத்திலும் பின்னும் ஆறும் சூத்திரத்திலும் குறிப்பிட்டிருக்கிறார். எனவே தம்மை இகழக் கூடியவர்கள் தம்மையும் தம் தலைவனையும் அறியாதவர்கள் என உணர்த்துகிறார். இதனால் தன் உயர்வை நவிலாது நூலின் உயர்வை மட்டும் நவின்றது நோக்கற்பாலது.

இனி இகழுக்கூடும் கூட்டத்தார் யார் என வினவின், அதற்கு விடை சிவஞான முனிவர் நன்கு விளக்கியுள்ளார். பிறவிக் குருடர் பலர் கூடி வேழங்காண விரும்பி அதன் கண் சென்று கையினால் ஒவ்வொரு உறுப்பினைத் தடவிப் பல் வேறாகப் பேசித் தம்முள் ஒருவரையொருவரை மறுத்துக் கண்ணுடையானொருவன் உண்மைப் பொருளைச் சொல்லுங் கால், அவனையும் தம்முள் ஒருவனாக வைத்து இழித்துக் கூறல் போல, ஒவ்வொரு சமயத்தாரும் தத்தம் உணர்விற் கேற்ப ஏகதேசப் பொருள்களையே கூறிச் சித்தாந்த சைவ நெறிநின்று ஆசான் திருவருள் பெற்று மெய்ப் பொருளை உணர்த்துபவரை இகழ்ந்துரைப்பது உலக இயல்பு எனத் தெரிவிப்பர் சிவஞான யோகியர். அவ்வகை ஏகதேசப் பொருளைக் கைப்பற்றும் சமயத்தவர் புறச்சமயிகள் மட்டும் அல்ல. சில அகச் சமயிகள்கூட என்று சம காலத்தில் வாழ்ந்த அருணந்தி சிவம் மெய்கண்டாரின் அவையடக் கத்திற்கு விரிவு செய்த சித்தியார் பரபக்கத்தில் குறிப் பிட்டுள்ளார்கள். அவற்றுள் புறப்புறச் சமயத்தில் உலகா யதம் நால்வகைப் பௌத்தம், ஆருகதமென அறுவகைச் சமயங்கள் அடங்கும். புறச்சமயத்தில் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என் பவை அடங்கும். அகப்புறச் சமயத்தில் பாசுபதம், மா விரதம், காபாலம், வாமம், பைரவம், ஐக்கியவாத சைவம் சேரும். அகச்சமயத்தில் பாடாணவாத சைவ முதல் சிவாத்துவித சைவம் ஈறாக ஆறு சமயங்கள் சேரும். எனவே புறச்சமயத்தார் கூறும் இகழ்ச்சி மொழியை மட்டுமல்லாது அகச்சமயத்தார் கூறும் புறங்கூற்று மொழி யையும் மதிப்போமல்லோம் என்று ஆசிரியர் கூறுவது தாம் கோட்பாடு செய்த சூத்திரங்களின் பிணக்கில்லாத தன்மையைத் தெரிவிக்கிறது.

அவையடக்கத்தில் ஆசிரியர் ஸ்ரீமெய்கண்டாரின் மாண் பும் அவரது சீரிய கொள்கையும் நன்கு விளங்குகின்றது.

முதலாவது, தம்மையுணர்ந்து தம்மையுடைய தலைவனை உணர்வதே சமயத்தின் பயனாகும் என்பது.

இரண்டாவது, அத்தகைய மெய்ப்பொருள் கண்டவர்களே சிவமாகலின் அவர்களும் தம்மையுடையவர்களே என்பது

மூன்றுவது, தம்மை உலகம் இகழ்ந்தாலும், சிவப்பேறு உடையவர்கள் இகழமாட்டார்கள் என்பது.

நான்காவது, தம்மையுணராதவர்கள் தமது நூலையும் உணர மாட்டார்களென்பது.

ஐந்தாவது அத்தகையவர் தமக்குள்ளே புணராமையால் அவர்கள் இகழ்ச்சியோ, புறங்கூற்று மொழிகளோ தம்மைப் பாதிக்காது என்பது.

ஸ்ரீ மெய்கண்டார் உலகத்தார்மீது கொண்ட கருணையால் தம்முடைய கொள்கையைத் தெளிவு படுத்தியிருக்கிறார். பிறசமயங்களைக் குறை கூறவில்லை. தாம் கூறிய மெய்ப்பொருளை யாவரும் உணர வேண்டுமென்ற பெருங் கருணையும் புலனாகிறது. (ஏசுநாதர் சொன்னது போல்) தம்முடைய பணி நிறைவேறுவதேயன்றிப் பிற சமயங்களைப் புறக்கணிப்பதல்ல என்று பொருளும் அவையடக்கத்தில் தொனிக்கிறது.

மெய்கண்டார், திருமூலர், நீலகண்ட சிவம் இவர்களைப் பற்றியும், இவர்கள் காலத்தைப் பற்றியும் விரிந்த ஆராய்ச்சி செய்தால் சித்தாந்தச் செந்நெறியின் மேன்மை மேலும் மேலும் விளக்கம் பெற்று, நம்நாடு மட்டுமல்ல, பிறநாடுகளும் பாராட்டத் தக்க ஒரு பொதுச் சமயமாய்த் திகழும் என்பதில் ஐயமில்லை. ஸ்ரீ மெய்கண்டாரையும் நாற்றிசையும் அரும் பெரும் தத்துவஞானி எனப் போற்றும்.

---

## பஞ்சாங்க விளக்கம்

(தி. கி. நாராயணசாமி நாயுடு)

கிழமை (வாரம்), திதி, நட்சத்திரம், யோகம், கரணம் என்ற ஐந்தையும் சிறப்பாக உடையது காலநூலாகிய பஞ்சாங்கம். இதில் விடத்தக்க நச்சு (விஷ)க் காலம் காட்டும் தியாஜ்யம் (விலக்கப்பட்டது), சிரார்த்தங்கள், விரதங்கள், அகசு (பகலின் மானம், அளவு); கிரகங்களின் கால் (பாதம்) சாரம், *கோள் தோன்றுதல் (கிரக உதயம்) *கோள் மறைதல் (கிரக அஸ்தமனம்), சூரிய சந்திர கிரகணங்கள் (பற்றுதல்), ஆண்டு பிறந்த நாள் பற்றிய நன்மை தீமைக்

*கிரக மௌடிய காலம்.

குறிப்புகள், நாயன்மார்கள் அடைந்த திருநக்ஷத்திரங்கள், ஆழ்வார்கள் தோன்றிய திருநக்ஷத்திரங்கள், திருக்கோயில்களில் நிகழும் சிறந்த விழாக்கள், மற்றும் திருமணம் முதலிய நல்வினைகளை ஆற்றுவதற்கு உரிய, ஏற்ற முடைய நாளை வகுக்கத் துணை செய்யும் குறிப்புக்கள், விடுமுறை நாட்கள் பிறவும் உண்டு.

**1. கிழமை:** நாளுக்கு ஒன்றாக அடுத்து அடுத்துச் சுழல வருவதால் இது முதலில் காட்டப்பெறுகிறது. தொன்மையில் நம் நாட்டில் இல்லாத இந்த நாள் முறை இதிகாச காலத்திற்குப் பின், ஆட்சிக்கு வந்தது.

**2. திதி (பிறை):** வளர்பிறை முதல் திதி (பிரதமை) முதல் பௌர்ணமி வரை 15ம், தேய்பிறையில் முதல் திதி முதல் அமாவாசை இறாக 15ம், ஆக 30 ஆகும். இது விண்ணில் சூரியன் நிற்கும் இடத்திலிருந்து, சந்திரன் நிற்கும் இடத்தின் தூரத்தைக் குறிக்கும். ஒவ்வொரு 12 பாகை (டிகிரி)க்கு, ஒரு திதியாக வரும். ஒரு நாளில் 3 திதிகள் அல்லது 3 நட்சத்திரங்கள் அல்லது 3 யோகங்கள் வந்தால் அவமாகம் என்று அந்நாளைக் குறிப்பர். அம்முறையே ஒரு திதி அல்லது ஒரு நட்சத்திரம் அல்லது ஒரு யோகம் 3 நாளில் விரவி வந்தால் திரிதின ஸ்பிருக் என்று அந்நாளைக் குறிப்பர். திதியும், நக்ஷத்திரமும், காலத்தால் மிகப் பழமையானவை. இன்று நமக்குத் தேதி பயன்படுவது போல பழங்காலத்தில் திதியே பயன்பட்டது. திதி என்ற சொல்லின் திரிபே தேதி. இன்றும் சந்திரனை அடிப்படையாகக்கொண்டு வகுக்கப்பட்ட ஆந்திர கன்னடப் பஞ்சாங்கங்களில் திதியே தேதி நிலையில் நிற்பது. அதனால்தான் யுகாதி (தெலுங்கு ஆண்டுப் பிறப்பு) பங்குனி மாதம் அமாவாசையை அடுத்து, திதியைத் தழுவிப் பிரதமையில் வருகிறது.

**3. நட்சத்திரம் (மீன்):** பஞ்சாங்கத்தில், ஒரு தேதிக்கு நேரில் குறிக்கப்பெறும் நட்சத்திரத்தில் சந்திரன் அன்று நிற்கிறார் என்பது அக்குறிப்பின் பொருள். 13 பாகை (டிகிரி) 20 கலை (மினிட்)க்கு ஒன்றாக, 27 மீன்களும் கணக்கிடப்பெறும். பஞ்சாங்கத்தில் திதி, நட்சத்திரம், யோகம் இவற்றின் பின் குறிக்கப்படும் நேரம், அவை அக்காலத்தோடு முடிவதைக் காட்டுகிறது.

4. யோகம் (சேர்க்கை) : சூரியனின் உண்மையான அன்றாட நிலையை (ஸ்புடம்)யும் சந்திர புடத்தையும் கூட்டி 13 பாகை 20 கலைக்கு ஒன்றாக, விஷ்கம்பம் முதல் வைதிருதி இறுக 27 யோகங்களும் வரும். ஐந்து அங்கங்களில் யோகமே காலத்தால் மிகப் பின்னர் ஏற்பட்டது.

5. கரணம் : திதியின் முன் பாதிக்கு ஒரு கரணமும் பின் பாதிக்கு அடுத்த கரணமுமாக 30 திதிகளுக்கு 60 கரணங்கள் வரும். தேய்பிறை 14ம் திதியின் பின் பாதியிலிருந்து வளர் பிறை முதல் திதியின் முன் பாதிமுடிய உள்ள 4 கரணங்களும் சகுனி முதலிய 4 ஸ்திர கரணங்களாகும். அதன் பின் பவம் முதலிய 7 சரகரணங்கள் 8 முறை மீண்டும் மீண்டும் வந்து 60 கரணங்களும் முடியும். பஞ்சாங்கத்தில் தேதிக்கு நேரில் வரும் கரணமும், காலமும், முறையே முன் முடியும் கரணத்தையும், அக்கரணம் முடியும் காலத்தையும் காட்டும். நாளும் பஞ்சாங்கத்தைப் படித்து நாள் நிலை அறிந்து நடப்போர், நெடுஞ்செழியராகவும், நீங்காத செல்வராகவும், தீவினைவிலக்கும், நோயற்ற வாழ்வும், வினை முடிக்கும் ஆற்றலும் பெறுவர் என்று சாத்திரங்கள் முழங்கும்.

பஞ்சாங்கங்கள் சௌரமானம், சௌரசாந்திரமானம், சாந்திரமானம் என 3 வகை. ஞாயிறால் கணக்கிடுவது சௌரமானம். சந்திரனால் கணக்கிடுவது சாந்திரமானம். சூரியனால் வகுத்துக்கொண்டதில் சந்திரனால் வகுத்ததை உடன் இணைத்துக்கொள்வது சௌர சந்திரமானம்.

சௌரமான பிரிவுகள் 3 : (1) சூரியன் மேஷ ராசியில் (Zero point of Aeris) நுழைந்தது முதல் 12 ராசிகளையும் கடந்து மீண்டும் மேஷத்தில் நுழையும் வரை உள்ள காலம் சௌர நட்சத்திர ஆண்டு (Siderial year). இது 365 நாள் 6 மணி 9 நிமிஷம் 9½ செக்கண்டு கொண்டது. தமிழ் நாட்டில் மேஷம் முதலிய சௌரமான மாதங்களை முறையே சித்திரை முதலிய தமிழ்ப் பெயரால் வழங்குவர். இவை சந்திரனை ஒட்டிய சாந்திரமான மாதப் பெயர்கள் திரிந்து ஆனவை. இப்பெயர்கள் அம்மாதத்தில் பௌர்ணமியோடு சேர்ந்து வரும் நட்சத்திரப் பெயரைத் தழுவியவை. சூரியன் இராசியில் நிற்கும் காலம், வழி வேறுபாட்டால்

(கதிபேதம்) மார்கழியில் 29 நாள் 27 நாழிகையிலிருந்து ஆனியில் 31 நாள் 27 நாழிகைவரை மாறுபடும். சூரியன் இராசியில் நுழையும் காலம் (சங்கிரமணம்) பகலானால் அன்றே முதல் தேதி; இரவில் வந்தால், விடிந்து முதல் தேதி என்று கொள்வது மரபு. ஒரு குறிப்பிட்ட மாதத்தின் மொத்த தேதிகள் ஆண்டுக்கு ஆண்டு வேறு படலாம். இது உழவு முதலியவற்றால் பிணைக்கப்பட்ட இருது ஆண்டிலிருந்து (Tropical year) வேறு பட்டது. அதனால் ருதுக்கள் சிறிது சிறிதாகப் பின் சென்று கோடைக்காலம் குளிர்காலமாகவும், மார்கழி தை கோடைக்காலமாகவும் ஆகிவிடும். இந்த 3 குறைபாடுகளால் நட்சத்திர ஆண்டு ஆட்சி (நடைமுறைக்கு) தகுதி அற்றது. சாலிவாகனம், கலி, கொல்லம் ஆண்டுகள் இம் முறையைத் தழுவியவை. (2) மற்றொரு வகை ஆங்கில முறையாகிய கிரிகரிமுறை (Gregorian Calender). வசந்த விஷுவில் நுழைந்து, மீண்டும் அதே விஷுவத்தில் நுழையும் காலம் வரை 365 நாள் 5 மணி 48 நிமிஷம் 46 செகண்டு கொண்ட (Tropical year) ஆண்டாகும். இது, நட்சத்திர ஆண்டை, ஒவ்வொரு ஆண்டிற்கும் 20 நிமிஷம் 23½ செகண்டு விழுக்காடு முந்தும். இந்த கிரிகரி முறை இந்தியா உள்ளிட்ட உலகம் அனைத்திலும் நடைமுறையில் இருக்கிறது. ஆங்கில ஆண்டை 365 நாளாகக் கொண்டு எஞ்சிய 5 மணி 48 நி. 46 செ. ஈடுசெய்ய 4 ஆண்டுக்கு ஒருமுறை பிப்ரவரியில் ஒருநாள் கூட்டி 29 தேதியாகக் கொள்வர். அதனால் 4-லால் மிச்சம் இல்லாமல் வகுக்கக் கூடிய கிறிஸ்து ஆண்டுகள், 366 நாட்கள் கொண்ட லீப் ஆண்டு எனப்படும். இம்முறையில் சுமார் 400 ஆண்டுகளில் 3 நாள் அதிகம் ஆகிவிடும்; ஆகையால், இம் 3 நாட்களைக் குறைக்க நூற்றாண்டுகள் 400-ஆல் வகுக்க முடியாதவை லீப் ஆண்டு ஆகாது என்று வகுத்தனர். இம் முறையில் 4000 ஆண்டுகளுக்கு ஒரு நாள் அதிகம் வரும். ஆகையால் 4-லால் வகுபடும், ஆயிரங்களாகிய 4000-ஐப் பெருக்கல் கொண்ட ஆண்டுகளும் லீப் வருஷம் அல்ல என்று வகுத்தனர். இக் குறைபாட்டை நீக்க ஐக்கிய நாட்டுச் சங்கத்தில் முயற்சி நடைபெறுகிறது. (3) அடுத்தது, இந்திய அரசாங்கம் புதிதாக அமைத்த சக

ஆண்டு முறை. இதில் நட்சத்திர முறை, கிரிகரி முறைகளில் உள்ள குறை ஓரளவு ஒழிக்கப்பட்டிருக்கிறது. ராஷ்ட்ரீய தமிழ் பஞ்சாங்கத்தை (அரசாங்க வெளியீடு) வாங்கிப் பார்க்க. சாந்திர மாதம்—வளர்பிறை பிரதமை முதல் அமாவாசை முடிவுவரை உள்ள காலம். அல்லது தேய் பிறை பிரதமை முதல் பௌர்ணமி முடிய உள்ளகாலம். ஒரு சாந்திர மாதம் 29 நாள் 12 மணி 44 நிமிஷம் 2·8 செகண்டு கொண்டது. சாந்திர ஆண்டு 354 நாள் 8 மணி 48 நிமிஷம் 33·6 செகண்டு கொண்டது. இது நட்சத்திர ஆண்டைக் காட்டிலும் 10 நாள் 21 மணி 20 நிமிஷம் 36 செகண்டு குறைவுபடும். இக் குறையை நிறை செய்யவே அதிக மாசம் (அதிமாசம்—மலமாசம்—Intracalary month) சேர்ப்பது வழக்கம். சித்திரை முதலான சௌர மாதங்களில் முடியும் சாந்திர மாதங்களுக்கு முறையே சைத்திரம் முதலிய பெயர்கள் வழங்கும். ஒரு சௌர மாதத்தில் 2 சாந்திரமான மாதங்களின் முடிவு நாட்கள் வந்தால், பின்மாதம் அதிகமாதம் ஆகும். கார்த்திகை, மார்கழி, தை இந்த 3 சௌர மாதங்களில் ஏதாவது ஒன்றில் சில சமயம் சாந்திர மாத முடிவு ஏற்படாமலே இருக்கலாம். அந்த சாந்திரமாதம் க்ஷய(சூன்ய மாதம்-Decayed Month) மாதம் எனப்படும். இந்த சௌர சாந்திர மானத்தில் பிரதமை முதலிய திதியின் எஞ்சியவை (சேஷங்கள்), தேதிகளாகக் கொள்ளப்படும்.

அதிக மாதம் சேர்த்துக்கொண்டு, சௌர நட்சத்திர ஆண்டுடன் இணைக்காமல், 12 சாந்திர மாதங்களாகவே ஆண்டுகளைக் கணக்கிடுவது சுத்த சாந்திரமானம். இது மகம்மதியர் வழக்கு. இந்த சாந்திர ஆண்டு சௌர ஆண்டைக் காட்டிலும் சுமார் 11 நாள் குறைவாகலின், அவர்களது பண்டிகைகள் முன் ஆண்டில் வந்த தேதிக்கு 11 நாள் வீதம் முந்திவரும். இதில் பிறை தெரிந்த மறுநாளை முதல் தேதியாகக் கொண்டு மாதம் தொடங்கி, ஒவ்வொரு நாளும் தேதியாகக் கொள்ளப்பெற்றுப் பிறையுடன் மாதம் முடியும். ஹிஜிரி ஆண்டு இம் முறையில் ஆண்டுகள் கணக்கிடப்பெறும். இது பருவத்திற்கு ஒவ்வாத ஆண்டானதால், பசலி என்ற ஆண்டுக் கணக்கிடும் முறை முகமதிய மன்னர் காலத்தில் தொடங்கி இன்றும் வரி

வசூலில் வழங்கி வருகிறது. ஜுலை முதல் தேதி பசலியின் புதிய ஆண்டின் தொடக்க நாளாகும்.

தென் இந்தியாவில் வாக்கியம், சித்தாந்தம், திருக் கணிதம் என்ற 3 வகைப் பஞ்சாங்கங்கள் ஆட்சியில் இருக் கின்றன. வாக்கியம், தமிழ் நாட்டிலும், இலங்கையிலும் வெளியிடப் பெற்று, சிறப்பாகத் தமிழர்களால் பயன் படுத்தப்படுவது. கணனத்தை எளிதில் செய்வதற்காக, வாக்கியங்களின் உருவத்தில் பதங்களைத் தரும் வாக்கிய கரண (வாக்கிய பஞ்சாத்தியாயி) நூலை முதல் நூலாகக் கொண்டு செப்பம் செய்யப்படுவதால் இது வாக்கிய பஞ்சாங்கம். சோதிட சித்தாந்த நூல்களைப் பின்பற்றி, சௌர சாந்திரமானத்தைச் சிறப்பாகப் பயன் படுத்திக் கொண்டு, சாந்திரமானத்தைப் பயன்படுத்தும் ஆந்திரர், கன்னடியர், மகாராஷ்டிரர் முதலியோருக்கு உரிய தேவை களைத் தலைமையாகக் கூறுவது சித்தாந்த பஞ்சாங்கம். வானத்தில் கோள்கள் நிற்கும் நிலையை அப்படியே உண்மை நிலையில் (ஸ்புடம்) வடித்து, அதற்கு ஏற்ப, திதி முதலிய பிறவற்றைத் தருவது திருக்கணித பஞ்சாங்கம். இதற்கு வேண்டிய துல்லியமான (Very accurate) கிரக உண்மை நிலைகளை நாட்டிகல் ஆல்மனுக் (Nautical Almanac)கிலிருந்து ஆண்டுகொண்டு, வேண்டும் இடத் திற்குத் தேசாந்திர சமஸ்காரம் செய்துகொண்டு திருக் கணித பஞ்சாங்கங்களைக் கணிப்பர். சத்ரே (பம்பாய்), பாடி தேவ சாஸ்திரி (காசி), இரகுநாதாச்சாரியார் (நுங்கம் பாக்கம்–சென்னை), சுந்தரேச சிரௌதிகள் முதலியோர் திருக்கணித பஞ்சாங்கங்களைத் தொடங்கியவர்கள். இந்திய அரசாங்கம், சக ஆண்டைத் தழுவி, திருக்கணித பஞ்சாங்க மாக ஆங்கிலத்திலும் தமிழிலும் ஏனைய இந்திய மொழி களிலும ராஷ்ட்ரீய பஞ்சாங்கங்களை வெளியிடுகிறது. விலை 25 ந. பை. எல்லோரும் வாங்கிப் பயன் அடைக. எளிய விலையில் சிறந்த பதிப்பு.

ஞாயிறும் திங்களும் நிலஉலகும் ஒன்றை ஒன்று இழுப்பதாலும் (கவருதல் - Gravitation) சந்திரனின் துங்கன் (Moons apogee, Moons apseline) நிலையை ஒட்டி, சந்திரனின் துங்க மண்டலத்தில் உருவம் (Moons

Orbit) அப்போதைக்கப்போது வேறுபடுவதாலும், இதர கோள்களின் கவரும் சக்தியால் திங்களுக்கு உண்டாகும் அசைவினாலும், சந்திரனுக்கு வழிவேறுபாடு (கதிபேதம் Variation in Motion) ஏற்படுகிறது. இவைகளை (Variation, Evection, Planetary Perturbation) வாக்கிய கணனம் ஏற்பட்ட காலத்தில் நம் நாட்டினர் காணாததால் வாக்கிய கணனத்தில் அவை சேரவில்லை. திருக்கணித முறை அவற்றைத் தழுவியது. இதனால் திருக்கணிதத்திற்கும் வாக்கியத்திற்கும் திதி, நட்சத்திரம் முதலியவைகளின் காலங்களில், அமாவாசை, பௌர்ணமி, இவைகளை நெருங்கி இருக்கும் காலங்களில், சிறிது மாறுபடும்; மற்றக் காலங்களில் சுமார் 6 மணி 48 நிமிஷம் (17 நாழிகை) வரை மாறுபடும். இதனால் வாக்கியத்திற்கும் திருக்கணிதத்திற்கும் விரதம் முதலியவற்றில் மாறுபாடு ஏற்படுவது இயற்கை. வானியல் இதர விஞ்ஞானக் கலைகளைப்போல் நாளுக்கு நாள் வளர்ந்து மேன்மேல்* அதிக துல்லியமாக (Very Accurate) வகுக்கப்பட்டு வருகிறது. இந்த வளர்ச்சிகளைத் தழுவிக் கணிக்கப்படும் தமிழ்ப் பஞ்சாங்கங்கள் சிலவே ஆகும். பஞ்சாங்க அங்கங்களில் கிழமையில் உலகில் எங்குமே மாறுபாடில்லை. ஏனைய 4-ம் சூரிய சந்திரர்களின் வான நிலையைத் தழுவியவை. அவை காட்சிக்கு அடங்

---

*அதற்குத் துணை செய்யும் கருவிகள் :—

1. Hadley's Sextant. இது தூரத்திலுள்ள இரு இடத்தின் கோணத்தை அளக்கப் பயன்படும்.

2. Astronomical (Siderial) Clock : இக்கடிகாரம் வெப்ப, தட்ப நிலைகளால் மாறுபடாதது. 3. Chronometer.

4. Reflecting Telescopes.
   (i) Cassegrainian. (ii) Gregorian.
   (iii) Newtonian. (iv) Herschelian.

5. Transit Instrument. 6. Chronograph.
7. Transit Instrument with graduated circle.
8. Collimating Telescopes.
9. Prime vertical Instrument.
10. Photographic Telescopes.
11. Micrometer. 12. Transit Theodolite.
13. Heliometer. 14. Sundial முதலியன.

கியவை. வடிவுள்ள உள்பொருள்கள்; மனத்தால் வகுக்கப் பட்டவை அல்ல. சூரிய சந்திரர்கள் எந்த நாட்டினருக்கும் ஒரு சமயத்தில் ஒரு இடத்தில் தான் இருக்கக் கூடியவை. பலருக்குப் பலவிதமாக இருக்கும் எனக் கொள்வது அறியாமை. காட்சிக்கும் கணக்கிற்கும் முரண்பாடு உண்டானல் விரதம், சடங்கு எதற்கும் இயற்கைக்கு மாறு பட்ட பஞ்சாங்கம் பயன் படாது என்று சோதிட சாத்திரங்கள் பறை சாற்றுகின்றன. கிரிகரி முறையில் நடு இரவும், நம் முறையில், ஞாயிறு தோன்றும் காலமும் நாளின் தொடக்கக் காலம் ஆகும். கிரகணம் - பற்றுதல் என்ற பொருளை உடையது. நம் முன்னோர் ராகு கேதுக் களே இப் பற்றுதலுக்குக் காரணர் என்று கருதி வந்தனர். ஆனல் இன்று, பௌர்ணமியில் பூமியின் நிழல் சந்திரன் மேல் விழுவது சந்திர கிரகணம் என்றும், அமாவாசை அன்று சந்திரனின் நிழல் சூரியனைப் பார்க்க முடியாமல் பூமியின் மேல் விழுகிறது என்றும் தெளிவாக யாவரும் அறிவர். இம்மாறுதல்களைப் பழைய புதிய பஞ்சாங்கங்களில் காட்டப்பெற்ற கிரகண படங்களைக்கொண்டு காணலாம். பழைய பதிப்புக்களில் கிரகணம், பாம்பு போய்ப் பற்றுவ தாகக் காட்டப் பெற்றிருக்கும். ஆனல் இப் போதைய பதிப்புகள், விஞ்ஞான முறையைத் தழுவி விளக்கிக்காட்டப் பெற்றிருப்பதைக் காணலாம். வானநிலை ஆய்வுகள் எல்லா நாட்டிலும் நடைபெறுகின்றன. முன் கூட்டியே கோள் களின் வழிநடை, நிலைகளைத் தெரிவிக்கின்றன. பெரும்பா லும் கிரகணத்திற்கு விஞ்ஞான முறையைத் தழுவி வெளி வரும் அக் குறிப்புகளைப் பயன்படுத்திப் பஞ்சாங்க ஆசிரி யர்கள் கிரகணங்களைக் குறிப்பிடுகிறார்கள். பஞ்சாங்கம் நாட்டின் சமூக நிகழ்ச்சிகளைக் குறிக்கவும், விழா விரதங் களைக் காட்டவும் பயன்படுகிறது. அடுத்துத் திருமுறைகளில் வரும் சில காலக் குறிப்புக்களை இத்துறை வழியாக விளக்கி விழா, விரதம் என்ற அடுத்த கட்டுரையில் எழுதுவேன். அன்பர்கள் வரும் புதுத் தமிழ் ஆண்டுப் பிறப்பு முதல் ‘இன்று தோன்றியது என்றாலும் தீதாகா’ என்ற நம் விரிந்த, அறிவு தழுவிய, சைவக் கருத்துக்கொண்டு விஞ் ஞான வழி வாழ, இறைவன் துணை செய்வானாக.

---

# யாத்திரைக் கட்டுரை

(மலேயா-திரு. கே. இராமநாதன் செட்டியார்)

## 3. மலையில்

காலையில் சென்னையிலிருந்து புறப்பட்டுச் சுமார் பத்து மணிக்குத் திருத்தணிகை அடைந்தோம். திருத்தணிகை அடிவாரம், ரயில்வே நிலையத்திலிருந்து சுமார் எழு பர்லாங்கு. வழியில் சரவணப் பொய்கை. 365 படி ஏறினோம். இப் படிகள் ஓர் ஆண்டில் ஒவ்வொரு நாளும் உயரவேண்டுமென்பதைக் காட்டுகின்றன. ஏறுவது எளிது. இறங்கும்போதும் எங்கள் உற்சாகத்தில் வெய்யில் தோன்றவில்லை. நல்ல தரிசனம் கிடைத்தது. வள்ளி நாயகி ஒருபால்; தெய்வயானையம்பிகை ஒருபால். தேவிகள் இருவருக்கும் தனிச்சந்நிதிகளும் உள. தெய்வயானையம்மையின் வலக் கரத்தில் நீலோற்பல மலர். வள்ளியம்மையின் இடக் கரத்தில் தாமரை மலர். இங்கு சடகோபம் சாத்தும் வழக்கமும் தீர்த்தம் கொடுக்கும் வழக்கமும் உண்டு. இது மாமனர் வீட்டு வழக்கம். இங்குத் திருக்கார்த்திகையும் ஜனவரி முதல்தேதியும் விசேடம். ஆங்கிலேயரைப் பார்ப்பதற்குப் பதிலாகச் சிலர் ஆங்கில வருடக்கடைசி நாளில் வந்து மறுநாட்காலை அவனைக் கண்டு வணங்கிப் பஜனை செய்து போகும் வழக்கம் தற்காலத்தில் ஏற்பட்டுள்ளது. இங்கு இரண்டு திருமண உற்சவங்களும் நடைபெறுகின்றன.

சூரரோடு போர் செய்து கோபம் தணிந்திருக்கின்ற பதியாகையால் இங்கு சூரசம்ஹார உத்ஸவமில்லை. இங்குப் புஷ்பக் காவடியும் பழநியில் பால் காவடியும் எடுப்பது வழக்கம்.

கச்சியப்ப முனிவர் பாடிய தணிகைப் புராணம் இப் பதியைப் பற்றியது. அப்புராணத்தில் ஒரு பாட்டில், " அத்தலம் தன்னையாம் அடைகுவாம் எனப், புத்தியில் நினைப்பினும் புறத்திற் சொல்லினும், பத்தடி நடப்பினும் பரித்த நோயெலாம், கொத்தொடும் அவர்புறம் வழிக்கொண்டு ஓடுமே " என்று கூறுவது காண்க.

இவ்வூர் ஓதுவார் வைத்தியநாத தேசிகர் கூடவே இருந்து தரிசனம் செய்து வைத்தார். காஞ்சிக்கு முன் சென்று அங்கும் எங்கள் கூட இருந்தார்.

சுப்ரபாதம் : அடுத்துச் சென்ற மலை திருப்பதி. திருத்தணிகையிலிருந்து பஸ்போகிறது. மாலை அடிவாரம் சென்று அப்பொழுதே திருமலைக்குச் சென்று இரவு அங்குத் தங்கினோம்.

திருப்பதியில் சுப்ரபாதத்தரிசனம் மிக உருக்கமானது. இருள் நீங்கு முன் மணி 3-45க்கே சுவாமி சந்நிதியில் நின்றோம். அங்கு காலைப்பிரார்த்தனையை அரைமணியில் முடித்தோம். நாங்கள் பிரார்த்தனையை ஆரம்பித்தபோது சிலரே இருந்தனர். பிரார்த்தனையை முடித்தபின் நாமாவளி சொன்னோம். அதில் பலர் சேர்ந்து கொண்டனர். மணி 4½க்குக் கதவு திறந்தது. சுமார் 100 பேர் உள்ளே சென்றோம். சந்நிதியில் இருமருங்கில் அமைதியாக நின்றோம். அர்ச்சகர் உள்ளே நுழைந்தார். வடமொழியில் பக்தர்கள் தோத்திரம் பாடினர். முதலில் பாடியது சுப்ரபாதம். இது திருப்பள்ளி எழுச்சி. இதில் அநேகமாக உங்கள் சுப்ரபாதம் என்று முடிவதால் இவ்வரிசைக்கு சுப்ரபாதம் எனப் பெயர் வந்தது போலும். அச்சொல்லுக்கு "உனக்கு நற்பொழுது புலருக" என்பது பொருள். பாட்டுக்கள் கருத்துடையன. ஓசை நயம் உடையன. வேங்கடேசன் எழுவதற்குக் காரணங்கள் கூறப்படுகின்றன. "பொழுது விடிகிறது எழு. இருடிகளும் அர்ச்சனை செய்யக் காத்திருக்கின்றனர். மலர்ந்த மலர்களுடன் பக்தர்கள் காத்துக்கொண்டிருக்கிறார்கள். அரன், அயன், கந்தன் முதலானோர் உன் லீலைகளைப் பாராட்டுகின்றனர். நாரதமுனிவர் வீணையை மீட்டிக்கொண்டிருக்கிறார். வண்டினங்கள் ரீங்காரம் செய்கின்றன. இடைச்சேரி இளமங்கையர் எழுந்திருந்து தயிர் கடைய ஆரம்பித்துவிட்டனர். வண்டுகள் குவளையின் நிறத்தைவிடத் தங்கள் நிறம் மேன்மையான தென்பதை ஆண்டவனிடம் கூறவிரும்பின. பரமபதத்திலிருந்து மறு பதத்திற்கு வந்த பெருமான் தன் வேலையைத் தொடங்கவேண்டும். திக்குப் பாலகர்கள் அவன் கட்டளைக்குக் காத்திருக்கின்றனர். கருடகதி, சிம்மகதி, சர்ப்பகதி, கஜகதி, அஸ்வகதி, ஆண்டவனிடமிருந்து பழகக் கருடன் முதலான ஐவரும் நின் வாயிலில் காத்திருக்கின்றனர். மோட்சம் செல்லும் ஆத்மாக்களும் நின் சேவையே பெரிதென எண்ணி

நிற்கின்றனர். இப்பதிகம் பாடிய பின்னர் வேங்கடேச தோத்திரம், வேங்கடேசர் பிரபக்தி(சரணாகதி), வேங்கடேச மங்களாசாசனம் பாடப்பெற்றன. திருக்கதவும் திறந்தது. வேங்கடாசலபதியின் தரிசனம் கிடைத்தது. சுவாமி நின்ற திருக்கோலம்; உயர்ந்த அழகிய கம்பீரமான தோற்றம். அங்கு நிற்காமல் தரிசனம் செய்துகொண்டே திரும்ப வேண்டும்.

திருப்பதிக்கோயிலுக்குப் பணம் குவிவதுபோல் வேறு எந்தக் கோயிலுக்கும் சேருவதில்லை: அப்பணங்களை நல்ல வழியில் அரசாங்கத்தார் செலவிடுகிறார்கள். ஏழுமலையான் எதற்கெடுத்தாலும் அபராதம் வாங்குவான். இதைப் பற்றிய கதை ஒன்று உண்டு. இலக்குமியுடன் கோபித்துக் கொண்டு விஷ்ணுபகவான் வேங்கடாசலத்திற்கு வந்தார். அங்குப் பெரிய தர்பாராக யாவற்றையும் நடத்தியதால் செலவு அளவில்லாமல் வந்தது. இந்திரனிடம் வட்டிக்குக் கடன் வாங்கினார். முதலையும் திருப்பிக் கொடுக்கவில்லை. வட்டியும் கொஞ்சமும் கொடுக்கவில்லை. இலட்சுமி வந்தாள் ; இவற்றை யெல்லாம் தெரிந்துகொண்டாள். விஷ்ணு சொன்னார் : கடன் ஏறிவிட்டது. சம்பாதித்துத் தீர்க்கவேண்டும். இலக்குமி நீ ஓர் உதவி செய். மக்களுக்கு நீ நிறையச் செல்வத்தைக் கொடு. அவர்கள் செல்வச் செருக்கால் பல தவறுகள் செய்வார்கள். அவர்கள் தவறுகளை நான் காணிக்கை வாங்கிக்கொண்டு மன்னிக்கிறேன்." இவ்வாறு விஷ்ணு கடனைத் தீர்த்துக்கொண்டிருக்கிறாராம்.

இத் தலத்தில் பல கல்யாணங்கள் நடப்பதுண்டு. பலர் பிரார்த்தனையாக மொட்டை யடித்துக்கொள்வது வழக்கம்.

என் அப்பன் : இங்கிருந்து காளாஸ்திக்குப் பஸ் போகிறது. நடுப்பகலில் சென்றோம். தேவகோட்டை மெ. அரு. விடுதியில் தங்கினோம். அங்கு திரு. அருணாசலம் இருந்தார்கள். இரவு கோயிலில் அகண்ட பஜனை செய்யப் போவதாகச் சொன்னோம். மாலை கண்ணப்பர் ஏறிய மலைமேல் சென்றோம். சின்னமலை; படிகள் ஒன்றும் இல்லை. தத்துவங்களைக்காட்ட 36 படிகள் இருக்குமென்று எண்ணினேன். கண்ணப்பர் கோயில் மிகச் சிறிய கோயில். ஒரு சிறிய அறைக்குள் அவர் உருவம் இருக்கிறது. அந்த

உருவத்தில் பொலிவு இருக்கிறது. பக்கத்தில் உள்ள கோயிலில் லிங்கம். கண்ணப்பரைப் பற்றிய பாடல்களைச் சொன்னோம். இரண்டு நிமிஷம் தியானம் செய்தோம். விரைவாகப் படி ஏறியவர் கண்ணப்பர். ஆறே நாளில் ஆண்டவனை அடைந்தவர். எறும்பு ஊர்வதுபோல் செல்லாமல் நாம் அண்ணாமலை விரைவில் அடையவேண்டும். அறிவு இல்லையானால் பாதகமில்லை. பொருள் வேண்டாம்; உயர்ந்த ஜாதி வேண்டாம். வேண்டுவது பரமபிரேமை ஒன்றே. அது கொஞ்சம் கொஞ்சமாகக் கிடைக்கவேண்டு மென்று வேண்டினோம். இம்மலைக்கோயில் நல்ல திருப்பணி யைப் பெறவேண்டும். படிகள் கட்டிவிடப்படவேண்டும்.

பொன் முகலியில் ஆழமில்லாமல் தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கிறது. அதில் தீர்த்தமாடி இரவு கோயிலுக் குச் சென்று காளத்தி அப்பனை வணங்கினோம். சிலந்தி, காளம்=(பாம்பு), ஹஸ்தி=யானை வணங்கிய பதி. நிறையக் கூட்டம். ஒரு பெரியவர் சில விஷயங்கள் சொன்னார். அதன் உண்மையை நாங்கள் அறியோம். நாயன்மார் உருவங்கள் உள்ளே இருந்தவை வெளிப்பிராகாரத்தில் வைக்கப்பட்டனவாம். ஓரிடத்தில் மூவர் உருவங்கள் இருக் கின்றன. அதில் அப்பர் உருவம் இல்லை. அவர் பிராமணர் அல்லாததால்தான் காரணமாம். மற்றோரிடத்தில் நால் வருக்குப் பீடம் உளது. அதில் ஞானசம்பந்தர் உருவம் காணோம். கண்ணப்பருக்குப் பிராமணர் பூஜை இல்லையாம். இதில் உண்மையிருப்பின் நாளடைவில் திருத்தம் பெறும் என்பதில் ஐயமில்லை.

**அகண்ட பஜனை:** சரியாக மணி பத்துக்கு எங்கள் அகண்ட பஜனை ஆரம்பமாயிற்று. நாங்கள் அன்று பத்தொன்பது பேர். நாங்கள் மட்டும் மாற்றி மாற்றிச் சொன்னாலும் போதுமென்ற தைரியத்தோடு ஆரம்பித் தோம். தர்மபுரம் கல்லூரித் தலைவர் வித்துவான் - முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள் இம்மூன்று ஸ்தலங்களுக்கும் கூட வந்தார். ஈரிரண்டு பேராக முறை வைப்பதெனத் திட்டம். அக்கோயில் டிரஸ்டி இரண்டு ஒலி பரப்பி ஏற்பாடு செய்தார். நாங்கள் சொன்ன நாமம் "சிவாயநம ஓம் சிவாயநமஹ சிவாயநம ஓம் நமச்சிவாய." சிவ நாமம் கோயிலின் எப்பக்கமும் கேட்டது. கோயி

லுக்கு வந்தவர் ஒருவரும் இந் நாமத்தைக் கேட்காமல் போகமுடியாது. இங்கு மக்களிற் பெரும்பாலோர் தெலுங்கர்கள். ஆயினும் பலர் நாமாவளி சொல்வதில் சேர்ந்து கொண்டனர். பலர் கேட்டு நின்றனர். பலர் பார்த்துவிட்டுப்போயினர். அவ்வூரில் உள்ள சிலருக்கு முறை வைக்கவும் சந்தர்ப்பம் கொடுத்தோம்.

பினங்கிலிருந்து வந்த உருத்திராணி சேனனுக்குச் சுமார் ஒரு மணிக்கு ஆவேசம் வந்துவிட்டது. அதற்காக நாமாவளி நிறுத்தப்பெறவில்லை. அம்மையாருக்குத் தண்ணீர் கொடுத்து விபூதியிட்டுப் படுக்க வைத்தோம். கொஞ்ச நேரத்தில் விடுதிக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தோம். கோயில் முழுதும் சிவநாமம். எங்கும் அந்த அலை. எங்கள் உள்ளத்தில் உணர்ச்சி எழுச்சி. காலை நான்கு மணி வரை ஒரு நிமிஷம் நிறுத்தவில்லை. ரயிலுக்குப் போவதை உத்தேசித்து நாலுமுதல் நாலரை வரை காலைப்பிரார்த்தனைப் பாட்டுக்களைச் சொன்னோம். ஒலிபரப்பிக் கருவியில் கோயிலாரையும் சேர்த்துப் பஜனை செய்த அவ்வூர் நண்பர் களையும் ஊராரையும் வாழ்த்திமுடித்தோம். இது எப்பொழு தும் இங்குக் கண்டிராத காட்சி என்றனர். எங்களை யாரெனப் பலர் வந்து வினவினர்; வாழ்த்தினர். பொன் முகலியில் நீராடி ரயில் நிலையத்திற்குச் சென்றோம்.

மூன்று மலை தொடர்ந்து சென்றோம். முதலில் முருகன் மலை; பின்னர் அவர் மாமன் மலை; கடைசியில் அவர் தகப்பன் மலை. ஆறுபடை வீடுடையான் முருகன். அவன் குறிஞ்சிக்கு முதல்வன். அவன் மலையிலிருப்பது சரி. பர்வதராஜன் மகளோ கைலையங்கிரியானோ மலையிலிருப் பதும் அதிசயமில்லை. ஆழியில் கிடப்பவனுக்கு மலை ஏது? மலை அவனுக்கு இல்லையென்று முருகன் மலையைப் பிடித் துக்கொள்வான் போலும்! திருப்பதி முருகன் ஸ்தலமென் பர். பழமுதிர் சோலை அழகர் பதி ஆயிற்றென்பர். சொந் தக்காரர் ஒருவருக்கொருவர் எப்படி வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம்.

ஏசுநாதர் கூட மலைமேலே ஏறித்தான் உபதேசம் செய்தார். எல்லாத் தெய்வங்களும் மலைக்குப் போகிறார்க ளென்று தமிழ் நாட்டு அரசாங்கமும் உதகமண்டலத் திற்குப் போய்க்கொண்டிருந்தது.

---

## செய்திச் சுருக்கங்கள்

சமாஜப் பொதுக்கூட்டம்: சமாஜத்திற்காக வாங்கப் பட்டிருக்கும் கட்டிடம் சம்பந்தப்பட்ட நம்பிக்கை ஆவணத்தை (Draft Trust deed) ஆலோசித்து முடிவு செய்யச் சமாஜ உறுப்பினர்களின் பொதுக்கூட்டம் இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் 22–4–61 சனிக்கிழமை மாலை 6–30 மணிக்கு நடைபெறும். அன்று போதிய நிறைவெண் (Quorum) இல்லாவிட்டால் மறுநாள் 23–4–61 ஞாயிற்றுக்கிழமை காலை 9–30 மணிக்கு அதே இடத்தில் கூடி வந்திருந்தவர்களை வைத்துக்கொண்டு முடிவு செய்யப்பெறும். இது மிகவும் முக்கியமான காரியமான படியால் சென்னை நகரிலுள்ள எல்லா உறுப் பினர்களும் இதையே அழைப்பாகப் பாவித்து வருகை தரும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். வெளியூர் அங்கத்தினர்களும் தங்கள் கருத்துக்களைச் சமாஜச் செயலருக்குத் தெரிவிக்கும்படி வேண்டப்படுகிறார்கள். —G. கலியாணம், செயலாளர்.

மாதாந்தர வழிபாடு: சென்னைத் தியாகராயநகர்த் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத்தின் சார்பில் தொடர்ந்து நடைபெற்று வரும் முறைப்படி, சென்ற மாதம் 5–3–61 ஞாயிறன்று காலை 10 மணிக்குத் திருத்தணி கையிலும், மாலை 4 மணிக்குத் திருவெண்பாக்கத்திலும் நடை பெற்றது. திருவாளர்கள்: ச. சச்சிதானந்தம் பிள்ளை, அ. சோமசுந்தரஞ் செட்டியார், மேயர் கம்பெனி ஆர். மாசிலாமணி முதலியார், ச. சிவகுமாரன், எம்.ஏ., புலவர் முருகவேள், டைரக்டர் கே. சோமு, நடிகர் டி. பாலசுப்பிரமணியம், காஞ்சிபுரம் க. வச்சிரவேல் முதலியார், பி.ஏ., எல்.டி., இராவ்சாகிப் நல். முருகேச முதலியார் முதலிய பலர் திரளாகக் கலந்து கொண்டனர். வழிபாட்டுக்குப் பின் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில், திருத்தணிகையில் நல். முருகேச முதலியார், க. வச்சிரவேல் முதலியார் ஆகிய இருவரும்; திருவெண்பாக்கத்தில் (பூண்டி இல்லத்தில்) ச. சிவகுமாரன், புலவர் முருகவேள், ச. சச்சிதானந்தம் பிள்ளை ஆகிய மூவரும் சொற்பொழிவாற்றினர். பூண்டி இல்லத்தில் வழிபாட்டுக் குழுவினர் அனைவருக்கும் திருவாளர்கள் மேயர் கம்பெனி மாசிலாமணி முதலியார், காண்ட்ராக்டர் சி. மாசிலாமணி முதலியார், டைரக்டர் கே. சோமு ஆகியோர் நண்பகல்

உணவும்; கைவண்டூர்த் திரு. கே. இராஜு முதலியார் அவர்கள் மாலைச் சிற்றுண்டியும் வழங்கிச் சிறப்பித்தனர்.

மாதாந்தர வழிபாட்டுக் கூட்டத்தின் இரண்டாவ தாண்டு நிறைவு விழா: சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்பிரசார நிலையத்தின் "மாதாந்தர சமயப் பிரசார வழிபாட்டுக் கூட்டம்" இரண்டாண்டுகளாகத் தொண்டை நாட்டில் உள்ள பாடல் பெற்ற சிவத்தலங் கட்குச் சென்று முறையாக வழிபாடாற்றி வந்துள்ளதை அனைவரும் அறிவர். அதன் இரண்டாவதாண்டு நிறைவு விழாவும், தொண்டை நாட்டுச் சிவத்தலங்களின் (32) வழிபாட்டு நிறைவு விழாவும் 16—4—61 ஞாயிறு மாலை மயிலாப்பூர் ஸ்ரீ கபாலீச்சரத்தில் திருவீதி வலம் வருதல், முதலாய சிறப்புக்களுடன் நடைபெறும். அதை ஒட்டி அன்று காலை சைதைக் காரணீசுரர் வழிபாடும் செல்வமலி குன்றத்தூர் சென்று சேக்கிழார் பெருமானை வழிபடுதலும், அங்குள்ள திருநாகேச்சரப் பெருமானை வழிபடுதலும், கோவூர்-ஸ்ரீ சுந்தரேசரை வழிபடுதலும் நிகழும்.

பாராட்டு விழா: சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், சமாஜத்தின் துணைச் செயலராகவும் "சித்தாந்தம்" இதழின் துணையாசிரியராகவும் இருந்து பணி புரிந்துள்ள நமது சமாஜப் பேரன்பரும் ஆகிய உயர்திரு. அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம்.லிட்., அவர்கள் எழுதிய "கவிதையும் வாழ்க்கையும்" என்ற நூலைப் பாராட்டிச் சென்னை அரசினர் ரூபா ஆயிரம் பரிசு அளித்ததைச் சிறப்பித்து, வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் பழைய மாணவர் சங்கத்தின் சார்பில் 19-3-61 அன்று ஒரு சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. உயர்திரு. மு. ப. ராச்சிமுத்து முதலியார் பி.ஏ., பி.எல். அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார்கள். திருவாளர்கள்: மா. இளஞ்செழியன், எம்.ஏ., ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்., மணியரசு க. நாராயணசாமி, திரு. சே. பழநிவேலு, பி.ஏ., கேப்டன் தி. ரெ. சண்முகம், பி.ஏ., இ.எம்.இ., எம்.எம்.ஐ.இ., காஞ்சி புரம் விற்பனைவரி மாவட்ட அலுவலர் கலியாணசுந்தரம் முதலிய பலர் பாராட்டுரைகள் வழங்கிச் சிறப்பித்தனர். திரு. அ. மு. ப. அவர்கள் பாராட்டுரைகளுக்குத் தக்க மறு மொழிகள் கூறி மகிழ்வித்த பின்னர், அப்பா. திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் நன்றியுரை நவின்றார்கள்.

மாலை 5·30— 7·00 பொதுச் சொற்பொழிவுகள்.
7·00— 8·00 கிராமக் குழந்தைகளுக்கு இரவுப்பள்ளி.
8·00— 9·00 இரவு உணவு, இளைப்பாறல்.
9·00—10·00 திருமுறை, சித்தாந்த சாத்திரங்கள் ஓதுதல்.
10·00—10·30 கூட்டு வழிபாடு, தியானம்.

நீடிக்கும் காலம் : ஐந்து நாட்கள்.

வகுப்பில் சேரக்கூடியவர்கள் : சைவ சித்தாந்தம் கற்க விரும்பும் மாணவர்களும் மற்றும் இளைஞர்களும் சேரலாம். சைவ ஒழுக்கங்கள் கூடியவர்களாய் இருத்தல் வேண்டும். சிவ சின்னங்கள் (திருநீறு, உருத்திராக்கம்) அணிதல் வேண்டும். இளம் ஆசிரியர்களும் சேரலாம். யாவரும் கோடை வகுப்பு முதல்வரின் ஆணைக்கு உட்பட வேண்டும்.

கட்டணம் : 20 இளைஞர்களுக்கு இலவசமாக உணவும் உறைவிடமும் தரப்படும்.

மற்றவர்கள் உணவுச் செலவுக்குத் தினம் ரூ. 2 முன் பணமாகச் செலுத்த வேண்டும். உறைவிடம் இலவசம்.

முதியவர்கள் ஆன்மீக வாசமாக (Retreat) உடன் உறைந்து மாணவர்களுக்கு நல்ல சூழ்நிலையைத் தருவதல்லாமல் தாங்களும் மனச்சாந்தி பெற விரும்புபவர்கள் வந்து சேர்ந்து கொள்ளலாம். அவர்கள் உணவுச் செலவுக்கு தினம் ரூ. 2 செலுத்த வேண்டும். யாவர்க்கும் சாதாரண உணவுதான் அளிக்கப்படும்.

மாலைச் சொற்பொழிவுகளுக்கு யார் வேண்டுமானாலும் வரலாம். பத்திரிகைகளில் நிகழ்ச்சி விவரங்கள் தினப்படி விளம்பரம் செய்யப்படும். (அநேகமாக மாலைச் சொற்பொழிவுகள் ஆங்கிலத்தில் இருக்கும்.)

மாணவர்கள் கொண்டுவர வேண்டியவை : திருநீற்றுப் பை, திருமுறைகள் (திரட்டு), சித்தாந்த சாத்திரங்கள், (முக்கியமாகச் சிவஞான போதமும், சித்தியாரும்) திருக்குறள், நீர் அருந்த ஒருசிறு பாத்திரம், படுக்கை. (சமாஜப் புத்தகங்கள் கோடை வகுப்பு நிலையத்தில் விற்பனைக்கு வைக்கப்படும்.)

நுழைவு மனு : மனுவில் போதுமான தகவல்கள் தர வேண்டும். (வயது, படிப்பு, தொழில், வீட்டு முகவரி முதலியன.) மாணவர்கள் மனுவில் பொறுப்புள்ள யாராவது கையொப்ப மிடவேண்டும். மனுவுடன் 50 நை. பை. (ஸ்டாம்பு) நுழைவுக் கட்டணம் செலுத்த வேண்டும்.

கடைசி தேதி: நுழைவு மனுக்கள் 25—4—61க்குள் சமாஜச் செயலருக்குக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்ப வேண்டும். அனுமதிக்கப் பட்டவர்களுக்கு முழு விவரங்களும் பின் அனுப்பப்படும்.

ஜி கலியாணம் பிள்ளை,
சமாஜச் செயலர், 14, வாரன் ரோடு,
மயிலாப்பூர், சென்னை-4

10—4—61

## அப்பர் திருநாள் - சித்திரைச் சதயம்.

நம் சமாஜத்தின் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் சித்திரைச் சதயத்தன்று அப்பர் திருநாள் கொண்டாடப் பெறும். சைவப் பெருமக்கள் அனைவரும் இந் நன்னாளைக் கொண்டாடிச் சிறப்பிப்பார்களாக.



Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.